*Kumaran̲*

*Āram 2, muttu 20*

*January 07, 1925*

Record no. 313

Registered No. M. 1823.

உ
சிவமயம்.

"KUMARAN" Karaikudi.



# குமரன்

"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.

"ஆலயந் தொழுவது சாலவு நன்று." "திரைகட லோடியுந் திரவியந்தேடு."

ஆரம். உ } காரைக்குடி, ரக்தாக்ஷிஸு மார்கழிமீ உசஉ (7-1-25) { முத்து உ0.

## சா. அ. ராம. சாமிநாதச் செட்டியாரவர்கள் புரிந்த உபந்யாசம்.

—:o:—

(சென்ற வாரத் தொடர்ச்சி.)

இனி நம்மவருக்கெனக் கூட்டுறவு நாணயச்சாலை (பேங்கு)களை ஆங்காங்கு நிறுவிக் கொள்ளுதல் மிகவும் அவசியமாகும். இரங்கூனில் ஒரு கூட்டுறவு நாணயச்சாலையின் ஷேர்கள் நம்மவர்களே பெறல் வேண்டுமென்ற திட்டமுமிருக்க வேண்டும். நடாத்தும் முறை மேனாட்டு முறையையும் நமது தொழின் முறையையும் அநுசரித்ததாக விருத்தல் வேண்டும். கூட்டுறவுத் தொழிற்சாலைகளையும் இவ்வாறே நிறுவிக்கொள்ளுதல் சாலச் சிறந்ததாகும். எதனையுங் காலந் தாழ்த்தாது விரைவிற் செய்தல் வேண்டும். பேங்குகளுக்கும் கோர்ட்டுகளுக்கும் தைப் பூசத்தன்றும் அதன் மறுநாளுமாகிய இரண்டு நாட்களையும் விடுமுறை நாட்களெனக் கவர்ண்மெண்டார் உத்திர வளிக்கவேண்டுவது மிகவும் அவசியமாகும். நாமும் மற்றத் தமிழ் வகுப்பார் ஒவ்வொருவரும் இங்கு தைப் பூசத்தையே பெருநாட்களாகக் கொண்டாடுகிறோம். இரண்டு நாளதிகமென வெண்ணினால் தைப்பூசத்தன்றேனும் ஒரு நாளைக்குப் பர்மா முழுவதற்கும் விடுமுறை நாளாகக் குறிப்பிட வேண்டுமெனக் கவர்ண்மெண்டாரை நமது சங்கத்தின் மூலமாகக் கேட்டுக் கொள்ளல் வேண்டும். நமது சிறுவர்களைத் தமிழ்க் கல்வி நன்கு கற்றபின்னர் இத்தேயத்திற் கழைத்து வரும் முறை நலந்தருவதாகும். ஆனால் சிறுவர்களை இங்கழைத்து வருவதிற் பெரும்பாலாகத் தேர்ச்சியும் ஒழுக்கமுமுடையவர்க ளாகின்றார்க ளென்பதையும் மறுக்க முடிய வில்லை. ஒன்று நன்கு படித்தப் பிறகு கூட்டி வருதல் வேண்டும்; இன்றேல் இந்நாட்டில் முக்கியமான வூர்களில் உபாத்தியாயர்களை நியமித்துக் கல்வி போதிக்க வேண்டும். தமிழ்க் கல்வியை நன்கு போதிக்க வேண்டியதுடன் நமது தொழிலுக்கு மிகவும் இன்றியமையாததும் இராஜபாஷையாகவுமுள்ள ஆங்கிலக் கல்வியையும் நன்கு போதித்தல் அவசியமாகும். அவ்வாறு கற்றுக்கொண்ட சிறுவர்கள் நமது சமயத்தையும் விபூதி ருத்திராக்ஷ தாரணத்தையும் சுத்த போஜனம் அருந்துவதையும் மறத்தல் கூடாது. இரங்கோனில் இப்பொழுதுள்ள கலாசாலையை விருத்தியாம்சத்திற்குக் கொண்டுவர வேண்டியது மிகவும் முக்கியமாகும். இன்கம்டாக்ஸ் விஷயத்தைப் பற்றிச் சில கூற வேண்டியது அவசியமாகிறது. வருட வாரியிற் கணக்குகளை நன்கு முடித்துக் காட்டுவது மிக மேன்மையாகும். வருமான வரிச் சட்டம் திருத்தப் பெற்றாலன்றி வரித்தொகை குறையுமென எதிர்பார்க்க முடியாது. ஆனால் நம்மவர்கள் ரொக்கப் பாக்கி விகிதம் (காஷ்பாலென்ஸ் சிஷ்டம்) காட்டுவோமானால் வரிச்சுமை வலுக்காதென்றே நினைக்கிறேன். அவ்விதம் காட்டுவதற்கு வருடவாரியிற் கணக்கு முடித்து விடுவது மிக உதவியாக விருக்கும். எதிலும் நாம் உண்மையோடு சென்று கொண்டிருந்தால் எதிர் பாராத நன்மையைப் பெறலாம். இன்றேனும் தீமையேனும் நம்மை வந்தணுகாது.

இனி நடக்கவேண்டிய வேலைகளும் மிகுதியாக விருக்கின்றன. உங்கள் அரிய காலமும் நீண்டுசெல்கின்றது. நமது நாட்டில் நமது சமூக முன்னேற்றத்தைத் தடுத்துக் கொண்டிருக்கும் சில முக்கியமான விஷயங்களைக் கூறிவிட்டு நிறுத்திவிடுகின்றேன். நமது வணிகர் சமூகத்தைப் பற்றிக் கூறுமிடத்து,

குமரேசர் சதகத்தார்

"கொண்டபடி போதும்விலை பேசின்பஞ் சிறிது கூடிவர் நயமுரைப்பார் கொள்ளுமொரு முதலுக்கு மோசம்வ ராதபடி குறுகவே செலவுசெய்வர், வண்டப் புரட்டர் தாம் முறிதந்து பொன்னடகு வைக்கினுங் கடனீந்திடார் மருவு நாணய முளோர் கேட்டனுப்பினு மவர்வார்த்தையிலெலாங் கொடுப்பர், கண்டெழுது பற்றுவர வினின்மயிர்பிளந்தே கணக்கிலணு வாகிலும்விடார் காசுவீணிற்செல விடாருசித மானதிற் கனதிரவியங்கள்விடுவார், மண்டலத் தூடுகன வர்த்தகஞ் செய்கின்ற வணிகர்க்கு முறைமை யிவைகாண்" என்று கூறுகிறார். இது நம்மவர்களின் முன்றையென்று கூறிப் போந்திருப்பதை ஒரு புறம் எண்ணி மேதகு சிறப்பு வாய்ந்த இத்தர்ம சமூகத்தில் இன்றைக்கு இரண்டாயிரம் வாலிபர்கள் மணமின்றியிருப்பதை மற்றொரு புறம் எண்ணினால் சமூகப்பற்றுள்ள எவர் மனந்தான் துன்புறாதிருக்கும்! இவ்வாறு மணங்கள் தடைப்பட் டிருப்பதற்குக் காரணம் வீண் செலவு, ஆடம்பரச் செலவுகளும், சீர் முறைகளும் கணக்கின்றியதிகப்பட்டுப் பெண் வீட்டுக்காரரிற் சிலர் செலவுகளுக்கென்று பெருந்தொகையாக வாங்க ஆரம்பித்ததே யாகும். நம்மவரிற் பணக்காரர்கள் பணக்காரர்கள் வீட்டிலேயே பெண்களைக் கொடுக்கிறார்கள். சிறிது பணமுள்ள மற்றவர்களும் அப்பணக்காரர் வீடுகளையே மிக ஆர்வத்தோடு நாடுகின்றனர். இந்நிலையில் வயதின் இளமை மூப்புக்கூடப் பார்க்க முடியவில்லை. நிற்க, நமது சமூகத்தில் ஐம்பதாயிரம் ரூபாய்கள் உள்ள ஒருவர் வீட்டிற் பணம் கொடுத்து மணமியற்றிக் கொள்ள வேண்டிய பையன்க ளிருப்பார்க ளானால் அவனைப் பணக்காரனென்று சொல்ல முடியாது. மற்ற ஜாதியாருக்கு ஐம்பதாயிர ரூபாய்களிருந்தாலோ, அவனை ஸ்ரீமானென்று கூற யாரும் பின் வாங்க மாட்டார்கள். இல்லாளகத்திருக்க வில்லாததொன்றில்லை' யென நம தெனவைப் பேரா

ட்டியாரும் 'குலமகட்கழகு தன் கொழுநனைப் பேணுதல்' என அதிவீர ராம பாண்டியனாரும் கூறிச்செல்லுதலான், புருடனுக்கு மனைவி வேண்டுவதும் இன்றியமையாததாகவிருக்கின்றது. இந்நிலையிற் பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டாரிடம் பணம் பெறுதலறவழியாகுமா? பணங் கொடுத்துப்பெற்ற மனையார்கள் புண்ணிய காரியத்திற்குத் தாரைவார்க்க யோக்கியதை யற்றவர்களென நமது புராணங்கள் கூறுகின்றன. ஓய்வில்லாது புண்ணிய காரியங்களையே செய்து கொண்டிருக்கும் நமது சமூகத்தாருக்கு இது அடுக்குமாவென்பதை நீங்களே யோஜித்துப் பாருங்கள். ஸ்ரீ காசி முதல் கன்னியாகுமரி வரை அளவு கடந்த தர்மங்களைச்செய்து கண்டவர்களுக்கெல்லாங் கன்னிகாதானம் புரிந்து வரும் தர்ம சமூகத்தாரது பிள்ளைகளிற் பெரும்பாலார் மணமின்றித் தவிக்கிறார்களென்ற சொல்லைக் கேட்கச் சமூகப்பற்று நிறைந்துள்ள உங்கள் மனம் சம்மதிக்குமா? இந்த இடுக்கணைக் களைய ஊழியர் சங்கத்தார் ஊரூராகச் சென்று தீர்மானங்கள் செய்வச்செய்து படாத பாடுபட்டுத் தொண்ணூற்றூரார்க் கூட்டத்தையும் கூட்டினார்கள். அக்கூட்டமும் கருணை கூர்ந்து நல்ல தீர்மானங்களைச் செய்தது. அத்தீர்மானங்களிற் றலையாய பெண் வீட்டார் செலவிற்காக ஐயாயிர ரூபாய் வாங்கலாமென்ற தீர்மானமும் கால பேதத்தா லழிந்தது. ஒன்றின்பின் ஒன்றாகச் சீர் முறைத் தீர்மானங்களும் வீண் செலவுத் தீர்மானங்களும் மறைய வாரம்பித்தன. வீண் செலவுகளை நினைத்தால் இங்குள்ள எவர் மனமும் புண்ணாகாதிராது. தடுமாறினால் உடைந்து தகர்ந்து போகக்கூடிய மண் ஜாடி, மங்குப்பீங்கான் சாமான்கள் அடித்துக் கொண்டு போகும் பணத்திற்கோ ரளவுண்டா? தரையில் வைத்து விட்டால் கறையானரிக்கும் அலுமினியச் சாமான் பறிக்கும் பணத்திற்கு வரையறையுண்டா? இவ்வளவு சாமான்களையும் அடைத்துவைப்பதற்கு 'இடம்படவீடிடேல்' என்ற நமதௌவைப் பிராட்டியாரது வாக்கையும் மீறிக் கட்டும் பெரிய வீடுகளுக்குச் செல்லுந் தொகைக்கு ஓரெல்லை யுண்டா? இவ்வாறு நமது பணம் பல வழிகளிலுஞ் சென்று கொண்டிருக்குமானால் நாம் எப்படி முன்னேற முடியும்? இனிச் சீர் முறையைப் பற்றிக் கவனிப்போமானால் நமது முன்னோர்கள் சீர் முறையிற் பணக்காரர்களென்றும் பணமில்லாதவர்களென்றும் பேதம் பாராட்டாமல் ஒரே மாதிரியாகவே நடந்து கொண்டு வந்திருக்கிறார்களென்பதற்கு ஒரு ''இசைவு பிடிமானமே'' போதிய சான்றாக விருக்கின்றது. ஆனால் அக்காலத்தில் என்ன கொடுத்தார்களோ அதையே எழுதி வந்தார்கள். இக்காலத்திலோ கொடுப்பதொன்று எழுதுவதொன்றாக விருக்கிறது. இப்பொழுது இவர்கள் கொடுக்கிறபடி எழுதுவதென்றால் அரிசி மூடை ஐம்பத்தொன்று, பருப்பு மூடை பதினொன்று, அம்மி இருபத்தொன்று அரிவாள்மணை ஐம்பத்தொன்றல்லவா எழுத வேண்டும்? அது ஒரு புறமிருக்கச் சீர் முறையில் பச்சை குத்துங் குந்தாணி, அதற்கு வெள்ளிப்பூண் பிடித்த உலக்கை, மாப்பிள்ளைக்குச் செருப்பு இவைகளெல்லாம் எதற்கு? கலியாணமியற்றும் மங்கல நாட்களில் வாழ்நாள் முடிவுக்குதவும் பச்சை குத்துங் குந்தாணி, வெள்ளிப் பூண் பிடித்த உலக்கை இவைகளை வைக்கலாமா? இதற்கெல்லாம் ஏதாவது அர்த்த முண்டா? நமது பெண்கள் என்ன சொன்னாலுங் கேட்ப தென்பது சிறப்பாகுமா? நமது பெண்களோ கல்வி வாசனையறியாதவர்கள். எதைக் கண்டாலும் அவர்களுக்கு ஆசை. இவர்களுடைய ஆசையும் பிணக்குந்தான், சீர் முறைகளும் வீண் செலவுகளும் வரம்பு கடந்ததற்கு முக்கிய காரணமாகும். இனிப் பழங்கதைகளைப் பேசிக்கொண்டிருப்பதைக் காட்டிலும் எதிர்காலத்தை நோக்கிச் செல்லுதல்சிறப்பாகும். மறுமுறையும் தொண்ணூற்றூரார்க் கூட்டம் கூட்டுவதற்கு நமது நாட்டில் இப்பொழுது பெரு முயற்சியிருந்து கொண்டிருப்பதாக அறிந்து சந்தோஷிக்கிறேன். இச்செய்தி சமூகத்திற்குப் புதிய உயிர் கொடுத்தது போலாகும். கூட்டம் கூடிப் பெண் வீட்டுக்காரர் செலவிற்காகவும் பணம் பெறுதல் கூடா தெனவும் சீர் முறைகளை வரம்பு கட்டியும் வீண் செலவுகளை அறவே யொழிக்கும்படியான தமான தீர்மானங்களியற்றி அத்தீர்மானங்கள் உரம் பெற்றிருப்பதற்கு இக்காலத்திற் கேற்ற முறையில் வேண்டுவன செய்து தீர்மானங்களை யாரும் மீற இடமிராதவாறு செய்ய வேண்டுமாய் நமது நாட்டில் உள்ள நம்மவர்கள் வேண்டிய உதவி புரிவார்களெனவும் ஊழியர் சங்கத்தார் தங்கள் தொண்டை விடாதியற்றுவார்களெனவும் நம்புகிறேன். இவ்விஷயத்தை இம்மகா நாட்டில் ஓர் தீர்மானமாகக் கொண்டுவந்து தீர்மானிக்க வேண்டுவதுடன் அத்தீர்மானத்தை நமது நாட்டிற்கு அனுப்புவதும் சாலச் சிறந்ததாகு மென வெண்ணுகிறேன். நமது நாட்டிற் பெண் கல்வியைப் பரப்பவேண்டுவதுடன் இனி நமது பெண்களையும் கட்டாயமாகப் படிக்க வைப்பது மிகவும் நன்மை தருமென வெண்ணுகிறேன். நமது பெண்கள் நன்கு படித்துக் கொண்டு விடுவார்களானால் மனைவி மக்களையும் உற்றார் உறவினரையும் விட்டுப் பிரிந்து கப்பலேறி இருந்து வருடக் கணக்காகத் தங்கிப் பொருளீட்டுவதற்கு நாம் படும் சிரமங்களையும் அவர்கள் வருடக் கணக்காகப் புருடர்களை விட்டுப் பிரிந்திருக்க நேர்ந்திருப்பதையும் நன்கு உணர்ந்து கொண்டுவிடுவார்கள். அப்பாற் புருடனுடைய வருவாயறிந்து நடப்பதோடு நமது நாடு முன்னேற்றத்திற் குறு துணையாகிய உள்நாட்டுச் சாமானை வாங்கும் உணர்ச்சியுமுண்டாகும். அவ்வுணர்ச்சி யுண்டாகவே, அயல் நாட்டுப் போலிச் சாமான்களில்வைத்திருக்கும் ஆசையும் அயல் நாட்டுப் போலி வியாபாரங்களும் ஒழியும். நமது நாடு மதம் சமூகமும் தழைத்தோங்கும். நிற்க, ஒவ்வொரு சமூகத்தாருக்கும் தனித்தனியாக எத்தனையோ பத்திரிகைகளிருக்கின்றன. அத்தனை பத்திரிகைகளையும் ஒவ்வொருவரும் ஆதரிக்கின்றனர். நமது சமூகத்திற் கென்று நமது சமூக மக்களால் நடாத்தப்பெறும் பத்திரிகைகள் ''தனவைசிய ஊழியனும்'' ''குமரனு'' வேயாகும். இவ்விரண்டு பத்திரிகைகளையும் ஆதரிப்பது நமக்கொரு பெரிதல்ல. ஒவ்வொரு நாடு சமூக முன்னேற்றங்களுக்கும் இந்த நாகரிக உலகத்திற்பத்திரிகைகள் தான் சிறந்த கருவிகளாக விருக்கின்றன. ஆதலால் நமது சமூகத்தவர் ஒவ்வொருவரும் இவ்விரண்டு பத்திரிகைகளையும் ஆதரிக்க வேண்டுவது மிகவும் அவசியமாகும். இரங்கூனிற் ''சுதேசபரிபாலனி'' நீண்ட நாட்களாக நடந்துவரும் பத்திரிகையாகவும் தினசரியாகவும் நம்மவர்களின் வியாபாரத்திற்கு உபயோகமானதாகவும் இருப்பதால் இப்பத்திரிகையையும் கூடிய வரை ஏனைய பத்திரிகைகளையும் ஆதரித்துச் செல்வ அழகோடு கல்வி அழகையும் இன்னும் மேலும் மேலும் பெருக்கிக் கொள்ள நமது குலதெய்வமாகிய ஸ்ரீ முருகப் பெருமான் அருள்புரிவாராக.

சுபம்! சுபம்!! சுபம்!!!

## தூத்துக்குடி.

தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் நாற்பத்தொன்றாவது ஆண்டுநிறைவுவிழா நாளிது மார்கழித் திங்கள் கஙு-கசு-கஎம்நாட்களில், ''நவசக்தி'' ஆசிரியர் உயர் திருவாளர் திரு. வி. கலியாணசுந்தரமுதலியாரவர்கள் அவைத்தலைமையில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. தலைவரவர்கள் முகவுரையாகச் சைவசமய வரலாற்றைப் பற்றிச்சிறந்ததோர் ஆராய்ச்சியுரையினை நிகழ்த்தினார்கள். சைவத்திருவாளர்களான திரு. வி. சிதம்பர ராமலிங்கம்பிள்ளையவர்கள், அரு. சோமசுந்தரம் செட்டியாரவர்கள், ம. ரா. குமாரசுவாமிபிள்ளையவர்கள் ஆகிய மூவரும், சைவசித்தாந்தப் பரம்பொருள். எவ்வுயிர்க்கும் அன்பாயிரு, நித்திய ஒழுக்கம் எனும் பொருள்களைப்பற்றி மிக அழகாக முதல்நாள் சொற்பொழிவுசெய்தனர். அடுத்தநாள், ச. முத்துக்குமாரசுவாமிப் பிள்ளையவர்கள் பாலசுந்தரநாயனாரவர்கள், T. S. கந்தசாமிமுதலியாரவர்கள் C. A. அரு. சோமசுந்தரச் செட்டியாரவர்கள், ம. ரா. குமாரசுவாமிப்பிள்ளையவர்கள் முதலியோர் முறையே, அமர்நீதிநாயனார், திருஞானசம்பந்தர் நற்கருணை, சிவஞானமுனிவரும் பெரிய புராணமும், அப்பரும் அன்பும், சமயகுரவர் பெருமை எனும் பொருள்களைப்பற்றி இனிமையாகப்பேசினர். தலைவரவர்களுடைய உருக்கமான முடிவுரையுடன் சபை இனிதுநிறைவெய்தியது. ஒவ்வொருநாளும் ருOO ஜனங்களுக்கு அதிகமாகவந்திருந்தனர். சிவபக்தியும் சீவகாருண்ய உணர்ச்சியும் சபையில் பெரிதும் ததும்பி நின்றது. ஸ்ரீமாந் முதலியாரவர்களும் பாலசுந்தரநாயனர், குமாரசுவாமிப்பிள்ளை யவர்கள், அரு. சோமசுந்தரச்செட்டியார்முதலியவர்கள் உ௦தேதிமுதல் வல்லநாடு, செப்பறை முதலிய இடங்களில் சிவத்தொண்டு புரிவார்களெனத் தெரிகிறது என ஒரு நிருபர் எழுதுகிறார்.

---



## நமது பலசரக்குக் கடை.

காரைக்குடி யூனியனில் ஒரு ஸ்தானம் காலியாகியிருக்கிறது. இந்த முயலைப் பிடிப்பதற்கு வேட்டைக்காரர்கள் புறப்பட்டு விட்டார்கள். இரண்டு மூன்று கையாகக் காடுகலைக்கப்படுகிறது. இந்த முயலைப் பிடிப்பதற்கு நாலாவது வார்டில் வலைகள் கட்ட ஆரம்பித்து விட்டார்கள். இந்த முயலைப் பிடிப்பதற்குப் போடுகிற கண்ணியில் பெரிய முயலான சேர்மன் முயலும் அகப்படுமென்பது கருத்தாதலால் வேட்டைக்காரர்கள் பலமாக வேலை செய்யப் போகிறார்களென்று கேள்வி. நாலாவது வார்டு ஜனங்கள் என்ன செய்யப்போகிறார்கள்? இதற்கு முந்திய வேட்டையில் வெற்றியடைந்து முயல் பிடித்தவர்கள் இந்த வார்டுக்குச் செய்த நன்மைகளென்னென்ன வென்பதை யுணர வேண்டும். வேட்டைக்காரர் விரிக்கிற வலையில் சிக்கிய முயலைப் பிடித்து அவர்கள் கையில் கொடுப்பதற்கு மட்டும் முன்வருவதில் பயனில்லை. அதனை அவர்களிடம் கொடுப்பதால் பொது ஜனங்கட்கு ஏதாவது பிரயோசன முண்டா என்பதைப் பற்றி நன்றாக யோசிக்க வேண்டும். நாலாவது வார்டில் உள்ள வோட்டர்கள் பகுதி பகுதியாகக் கூடி, யாருக்கு வோட் செய்வ தென்பதைப் பற்றி நன்றாக யோசிக்க வேண்டும். யூனியன் ஸ்தானம் பொது ஜனங்களுடையதென்று சிலர் கருதுவதே கிடையாது. அவர்களப்பன் வீட்டுச்சொத்தென்று கருதி யிருக்கிறார்களென்பதைப் பொது ஜனங்கள் உணர வேண்டும்.

அஞ்சா நெஞ்சன்.

## காரைக்குடி யூனியன் போர்டும் தண்ணீர்க் குழாயும்.

இவ்வூர் நகரம் வரவர அபிவிருத்தியாகி வருகிறது. தினந்தோறும் வெளியூர்களிலிருந்து ஜனங்கள் வந்து குடியேறிக் கொண்டிருக்கிறார்கள். ஊரிலுள்ள ஊருணிகளுக்குத் தண்ணீர் வருமிடங்கள் ஊருக்கு மத்தியிலும் ஊரை அனுசரித்து மிருக்கின்றன. வழிகள் மூடப்படாதபடியால் ஆபாசங்கள் நிறைந்து திரண்டு ஊருணியிற் சேருகின்றனவென்பதை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். மேற்கண்ட காரணங்களைக் கொண்டு இவ்வூருக்குத் தண்ணீர்க் குழாய் ஏற்படுத்த வேண்டியதை ஏழை முதல் பணக்காரர்வரை ஆதரிக்கக் கூடும். இந்தக் காரணங்களை உத்தேசித்து சமீபத்தில் நடந்த ஸ்பெஷல்மீட்டிங்கில் தண்ணீர்க் குழாய் ஏற்படுத்துவதற்குமுன் தண்ணீரைப் பரிசோதிப்பதற்கு வேண்டிய ஆரம்ப வேலையின் செலவுகளுக்காக ரூபா மூவாயிரம் சாங்கிஷன் செய்ய வேணுமாய்க் கோரி ஒரு தீர்மானம் பிரசிடெண்டால் கொண்டு வரப்பட்டது. இத்தீர்மானத்தைப் பெரும்பாலான அங்கத்தினர்கள் பலமாக எதிர்த்ததினால் தோற்றுப் போய்விட்டது. தீர்மானத்தை யெதிர்த்தவர்களின் நோக்க மென்ன? காரைக்குடிக்குத் தண்ணீர்க் குழாய் அவசியமில்லையென்பதா? காரைக்குடி யூனியன் எல்லைக்குள் ளிருப்பவரின் சௌகரியத்தின் பொருட்டு யூனியன் பணஞ் செலவழியக் கூடா தென்பதா? அல்லது தற்கால முள்ள பிரசிடெண்டு கொண்டு வந்த தீர்மானமாது மென்பதா? அல்லது சுகாதார விதிப்படி தண்ணீர்க் குழாய் கூடாதென்பது கருத்தா? ஒன்றும் விளங்க வில்லை! தீர்மானத்தை யெதிர்த்தவர்களின் பெயர் வருமாறு:—

ஸ்ரீமான்களான வெ. ராம. லெ. ராமசாமி செட்டியார், சி. மு. அரு. முத்துராமன் செட்டியார், சா. மு. மூத்தாராமன் செட்டியார், அ. ராம. வெங்கடாசல செட்டியார், சிவ. அ. அண்ணாமலை செட்டியார், மெ. கு. மெய்யப்பன் சேர்வைகாரர், அ. கா. காதர்மீரா அம்பலம். தீர்மானத்திற்கு சாதகமாக விருந்தார்கள்:-ஸ்ரீமான்களான ராய்பகதூர் ஆவி. பழ. சிதம்பரஞ்செட்டியார், வெ. மெ. ராம. சுப்பிரமணியன் செட்டியார், க. மெ. பழ. பழனியப்ப செட்டியார், குமரப்பனம்பலகாரர் சித. நா. ராம. நாராயணன் செட்டியார் ஆவர்.

குழாய் விரும்பி.

குறிப்பு:—தண்ணீர்க் குழாய் இவ்வூருக்கு அவசியமா இல்லையா வென்பதைப் பற்றி நமது அபிப்பிராயத்தை அடுத்த வாரம் தெரிவிப்போம்.

பத்திராதிபர்.

## நூல் சந்தாதார்.

ஏற்கனவே நூல் அனுப்பி வருபவர்களுடன் இதன் கீழ் குறிப்பிடப் பெற்றிருப்பவரும் டிசம்பர் மீ கடுஉ தவணையில் நூலனுப்பி யிருக்கிறார்கள்:—

ஸ்ரீமாந் எஸ். பி. ஸ்ரீனிவாசய்யங்காரவர்கள், பெருங்குறுணி, அபிராமம்.
,, தே. வெ. அருணசல செட்டியாரவர்கள், தேவகோட்டை.
,, அழ. ராம. நாகப்ப செட்டியாரவர்கள், சொக்கலிங்கம்புத்தூர்.
,, நா. ரா. சித. நாராயணன் செட்டியாரவர்கள், ஆ. முத்துப்பட்டணம்.
,, வி. சுப்பிரமணியம் அவர்கள், திருப்புத்தூர்.
,, அழ. ராம. சிதம்பரஞ் செட்டியாரவர்கள், சொக்கலிங்கம்புத்தூர்.
,, சு. ராம. பழனியப்ப செட்டியாரவர்கள், சொக்கலிங்கம்புத்தூர்.
,, எம். ராமசாமித் தேவரவர்கள், ராயகிரி, சிவகிரி.
,, அ. மு. அ. அண்ணாமலை செட்டியாரவர்கள், ஆத்தங்குடி.
ஸ்ரீமதி வள்ளியாச்சி யவர்கள், ஸ்ரீமாந் நாகப்ப செட்டியாரவர்கள்,மனைவியார், ஷண்முகநாதபுரம்.

## தீண்டாமை.

ஆதியில் ஏற்பட்ட பிரம், க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என நான்கு வருணங்களில் முதற் குலத்தோராகிய பிராமணர் வேதம் முதலியன ஓதவும், க்ஷத்திரியர் இராஜ்ஜிய பரிபாலனம் செய்து நீதி தவறாமல் செங்கோல் நடாத்தவும், வைசியர் வாணிபம் செய்யவும், சூத்திரர் உழுது பயிரிடவுமாக அவ்வக் குலத்துக்குத் தொழில் வகுக்கப்பட்டிருந்தது. இந்த நான்கு வருணத்தாரும் ஆதிகாலத்தில் அவரவர்களின் தொழிலை அவரவர்கள் தவறாது நடாத்தி வந்திருக்கின்றனர். தற்பொழுது பிராமணர்களோ வெனில் வேத பாராயணத்தையும் நித்திய நைமித்திக கருமங்களையும் கைவிட்டு, 'இதிலென்ன லாபமிருக்கிறது? நாம் ஒரு வக்கீல் பரீக்ஷையில் தேறிவிட்டால் ஜீவியகாலம் வரையில் அவ் வுத்தியோக வருவாயைக் கொண்டு வாழலா'மென்று நம்பி ஐரோப்பாவுக்கும் சென்று வக்கீல் பரீக்ஷையில் தேறுவதற்காக அந்நியர்களோடு பழகி அவர்களோடு உண்டுடுத்து முடிவில் பரீக்ஷையில் தேறித் தம் தாய் நாட்டிற்கு வந்து இந்திய மக்களின் பணத்தைப் பறித்துத் தாங்கள் அநுபவிப்பது மன்றி அரசாங்கப் பொக்கிஷத்தையும் நிரப்புகிறார்கள். இவர்களில் பல பேர் மேல்நாட்டாரின் வழக்கத்தைக் கைப்பிடித்துச் சாராயம், கள்ளு முதலிய பல அநாகரிக வஸ்துக்களை சாப்பிட்டு வருகின்றனர். இவர்களைத்தான் முதலில் இழி குலத்தோரெனச் சொல்லவேண்டும். தற்பொழுது தீண்டாதவரென்று சொல்லப்படுவோரில் ஒருவர் கிறிஸ்வரானவோ மகம்மதியரானவோ மாறிவிட்டால், இந்த மதப்பற்றற்ற புலிகள் அவர்கள் ரஸ்தாக்களில் செல்லலாமென்றும் தீண்டலா மென்றும் சொல்லுகிறார்கள். தீண்டாதவரென்று சொல்லப்படுவோரில் சு௦-பேர்களிருக்கிறார்களென்பதை இந்த உயர் குலத்தோர் அறிந்து வழக்கம் என்று சொல்வதற்குத் தாங்கள் முன் நடந்தபடி நடக்கவில்லை யென்பதையுணர்ந்து தீண்டாதவர்களென்று சொல்பவர்களை இனி மேலாவது பொதுரஸ்தாக்களிலும்குளங்கிணறுகளிலும் பொதுஸ்தாபனங்களிலும் செல்வதற்குத் தடைசெய்யாமல் எல்லோரும் நம் இந்தியமக்களென்பதை நினைத்து தீண்டாமையை நீக்கி ஒற்றுமையுடன் வாழ்வார்களாக.

சா. மு. வீர. அழகப்பசெட்டியார்,
புதுப்பட்டி.

## சென்னை அரசாங்க அச்சியந்திரசாலை.

சென்னை யரசாங்க அச்சியந்திரசாலைகளின் கஅஉ௩-உச௪ம் ஆண்டு வருட அறிக்கை சென்ற நவம்பர் மாதக்கடைசியில் வெளியாகி யிருக்கிறது. பிரஸ்தாப வருடத்தில் மொத்த வருமானம் ரூ க௩அ௫ிக௯—௦—௩; மொத்தச்செலவு ரூ எ௬௫சஉஎ—௧௫—௦. இவை மத்திய அச்சியந்திரசாலை, மவுண்டுரோட் கிளை, சிறைச்சாலைக்கிளை, உதகமண்டலம் கிளை என்ற நான்கின் வரவு செலவுகளும்சேர்ந்ததாகும்.

## கூழை ரங்கன்.

—o—

(முன் தொடர்ச்சி.)

கிழவி வந்து "இதுவரை இந்த வீட்டுத் துரும்பு கூடப் போனதில்லையே! இதை விட்டு விட்டால் இங்கே மகளெப்படி யிருக்கப் போகிறாள்? இனி என்ன செய்யப்போகிறேன்? அடியே, மகளே! இனி இந்தப் பக்கத்துக்கு வாராதே! அந்த வீட்டினுள்ளேயிரு" என்று சொல்லி ஒரு அறையினுள்ளே கொண்டு போய்த் தள்ளிக் கதவைப் பூட்டி விட்டாள். இதனைக் கண்ட பிரபு, 'அடடா! இந்தக்கிழவி எவ்வளவு கபடமற்றவளாக விருக்கிறாள்' என்று பரிதாபப்பட்டார். மங்கலம்பட்டி அம்பலகாரருக்கு வண்டி போய் அவரும் வந்துவிட்டார். கிழவிக்கு வேண்டாதவனும் முன் போலீஸ் கான்ஸ்டேபிளாக மதுரையி லிருந்தவனும் பொல்லாத போக்கிலியுமான சின்னன் என்ற அகம்படியனைக் காட்டி இவன்தான் செட்டியார் படுத்திருந்த போது இரண்டு மூன்றுதரம் வந்து போனான் என்று கிழவி சொன்னாள். அவனாக விருக்கலா மென்ற அநுமானம் எல்லார்க்கும் தோற்றியது. அவனை அம்பலகாரர் வேண்டிய மட்டுங் கேட்டார். அவன் இல்லை யென்று சொன்னாலும் போலீஸில் இருந்தவனாதலால் கொஞ்சம் அதிகாரத் துடனேயே சொன்னான். அம்பலகாரர் தமக்கு முன்னால் உள்ளதுஞ் சொல்லாமல் திமிரோடும் பேசுகிறானாதலால், "கட்டு புளிய மரத்தில்" என்று சொன்னார். பக்கத்தில் நின்ற இரண்டு மூன்று பேர் சேர்ந்து அவனைத் தலைகீழாக புளிய மரத்தின் கிளையில் கட்டித் தொங்கவிட்டார்கள். கைவிரல்களின் நகக் கண்களில் குண்டூசிகள் செலுத்தப் பட்டன. அவன் கதறுகிறான்; துடிக்கிறான்; "ஐயோ கழுத்தை யறுத்துக் கொல்லுங்களேன்! சித்திர வதை செய்கிறீர்களே" என்றுபுலம்புகிறான். "ஐயோ! தெய்வமே! உனக்குக் கண்ணில்லையா? நானா சங்கிலியை யெடுத்தேன்?" என்று அலறினான். இவையெல்லாம் இந்தக் கொலைகாரரின் காதில் விழவில்லை. சில நாட்கட்குமுன் அந்த ஜமீனின் தலையாரி ஏற்கனவே ஜமீன் ஆபீஸில் நடை பெற்ற திருட்டுக்கு மங்கலம் பட்டி அம்பலகாரன்தான் காரணமென் றெண்ணி அதை விசாரிப்பதற்காக மதுரையி லிருந்து பெரிய இன்ஸ்பெக்டரை வரவழைக்க ஏற்பாடு செய்திருந்தார். அதற்கிணங்கி வந்திருந்த இன்ஸ்பெக்டரோடு தலையாரி பேசிக்கொண்டிருக்கும் சமயத்தில் முன் பொருதினம் அம்பலகாரரால் ஹிம்சைப்பட்ட ஒருவன் வந்து, "இப்போது மணக்குடியில் ஒருவனைத் தலைகீழாகக் கட்டிக் கொல்லுகிறார்கள்" என்று சொன்னான். உடனே இருவரும் இரண்டுகுதிரைகளிலேறிக்கொண்டு மணக்குடிக்கு வந்து இவர்களியாவரையும் அரஸ்டு செய்து மதுரைக்குக் கொண்டு போய் விட்டார்கள். விசாரணை நடை பெற்றது. அம்பலகாரருக்கு ஏழுவருஷ கடுங்காவல் தண்டனையும் மற்றவர்கட்கு இரண்டு வருஷ கடுங்காவல் தண்டனையும் விதிக்கப்பட்டன. ரங்கநாதர்மட்டும் பெரிய பெரிய சிபார்சுகள் வைத்து ஏராளமான பணத்தையும் செலவிட்டுத் தப்பித்துக் கொண்டார். கையில் விலங்கு மாட்டா திருப்பதற்காக ரூபா இருபதாயிரம் செலவானது. பொதுவாக இந்தக் கேஸ் சம்பந்தமாகச் செலவு ரூபா ஐம்பதாயிர மிருக்கு மென்பது பொதுஜன அபிப்பிராயம்.

—

அத்தியாயம் ௧௫.

### கல்யாணம் வருமா?

—o—

ரங்கநாதர் பெரும்பாலாக தாஸி முத்தம்மாள் வீட்டிலே யிருந்தார். சில சமயங்களில் வீட்டிற்கு வருவது முண்டு. தற்காலத்தில் வாலிபர்கள் காபி கிளப்பிற்குப் போய்வருவது போலச் சாதாரணமாக தாஸி வீடுகளில் நுழைந்து வருகின்றனர். ஆனால் நமது ரங்கநாதர் காலத்தில் தாஸி வீட்டிற்குச் செல்பவனுக்கு ஜனங்கள் மதிப்புக் கொடுப்ப தில்லை. ஏழை யெளியவனாக விருந்தால் எல்லாரும் அஞ்சாமல் அவனைத் தூற்றுவார்கள். நமது ரங்கநாத செட்டியாரிடத்தில் பணமதிக மிருந்தபடியாலும் கேட்டவர்க்கெல்லாம் வாரிக் கொடுத்தபடியாலும் அவருடைய கெட்ட குணங்களை யாரும் பரப்பிப் பேசிக் கேலி செய்ய முன்வர வில்லை. இவர் வாழ்க்கையானது பெரும்பாலும் சந்தோஷகரமாகவே நிகழ்ந்து கொண்டிருந்தது. கஷ்டம் வருகிற காலமெல்லாம் பணம் முன்னின்று அதனை மறைத்து விட்டது. இவருக்கு வாழ்க்கைப்பட்டிருந்த பெண்ணை இவர் பிற்காலத்தில் ஒரு நாளும் நினைத்ததே கிடையாது. கல்யாணஞ் செய்தது முதல் இவர் பக்குவ மடைகிற வரை மனைவி சீதையைப் பற்றி விசேஷமாக எண்ணுதற்குத் தாயார் விடவில்லை. இவர் பக்குவ மடைவதற்குச் சில மாதங்கள் முன்னதாகவே இவருடைய சிநேகிதர்கள் அயல் மாதருடைய பழக்கத்தை உண்டாக்கி விட்டபடியால் பின்னரும் விரும்ப வில்லை. சீதையானவள் இந்த மகா பிரபுவின் மனைவியானது முதல் ஒரு நன்மையும் பெறவில்லை. ஆனால் அடியும் உதையும் தாறுக் கம்புக் குத்தும் சூட்டாங் கோற் சூடும் பிறவும் வேண்டிய வளவு பெற்றாள். துன்பம் வரவர அதிகப்படவே பொறுக்க முடியாமல் மேல மாகாணத்திற்குச் சென்று விட்டாள். தாயு மில்லை. தகப்பனும் கவனிப்ப தில்லை. அருமையாக வளர்த்த பாட்டியாரும் இறந்து போனாள். மாமியார், மாமனாரும் போய் விட்டனர். கணவனை அண்டினால் அடியும் உதையும் சூடும் கிடைக்கின்றன. வீடு வாசலென்று வரவும் முடியவில்லை. முகத்தைப் பார்த்து ஆறுதலடைவதற்குப் பிள்ளையுமில்லை. இப்படி யாருமற்ற அனாதையாக விருக்கிற சீதைப் பெண்ணுக்கு எப்படி சந்தோஷமான வாழ்வு கிடைக்கும்? தினந்தோறும் தன்னுடைய பரிதாபமான வாழ்வை யெண்ணி வருத்தப்பட்டுக் கொண்டே யிருந்தாள். உடலில் நோய் உண்டாவதற்கு முக்கிய காரணம் கவலை யன்றோ? கவலையினால் உண்ட சோறு உடலில் ஒட்டவில்லை. உலகத்திலுள்ள எல்லாவற்றிலும் பற்றின்றி வெறுப்புத் தட்டி எப்படியாவது இறந்துபோய் விட்டால் நல்லதென்று எண்ணிவிட்டாள். வரவரக் கவலை யதிகப்பட்டுக் கொண்டே வந்த படியால் உடல் வலி குன்றி மெலிந்து எலும்பும் தோலுமாகி விட்டது. இருந்த வீட்டில் பாட்டனாரான ராமநாதன் செட்டியார்தவிர மற்றவர்கள் தானிருப்பதில் விருப்பமில்லாமல் முனங்குவதையும் அறிந்தாள். இப்படியாகச் சீதையின் நிலைமை பரிதாபமாகி விட்டது. ராமநாதன் செட்டியார் வேண்டிய வைத்தியர்களைக் கொண்டு வைத்தியம் பார்த்தார். எவ்வளவு பார்த்தும் பயனில்லை. நோய் வரவர பலப்பட்டது. மருந்து பிடிக்கவில்லை. இன்னும் இரண்டு மூன்று நாளைய தாது தானிருக்கிற தென்று தேர்ந்த வைத்தியர்கள் உறுதியாகத் தெரிவித்து விட்டனர். ஆகவே வண்டி

(௯-ம் பக்கம் பார்க்க.)



## சீக்கோன் (பர்மா.)

ஒரு நிருபர் எழுதுகிறார்:—

சீக்கோனிலுள்ள பெரி. சொ. கடைக்கு கள்ளர் வகுப்பைச் சார்ந்த துரைச்சாமி என்பார் (ஒரு அடுத்தாள் நிலைமையில் ஏஜண்டாகவும்) அவரின் கீழ் (ஜாதி வகுப்புப் பகுத்தறியக் கூடாத) ஓர் அடுத்தாளும் இருக்கின்றனர். சுமார் ௨௫ தினங்களுக்கு முன் மேற் கூறிய துரைச்சாமி பகற் போஜன முண்டு நித்திரைக்குப் போகுங்கால் சமையற்காரனை யழைத்துப் பக்கத்து வீட்டில் விலையில்லாது கிடைக்கும் வெல்லத்தை வாங்கி இடைவேளைச் சிற்றுண்டிக்குச் சர்க்கரைப் பொங்கல் தயாரிக்கும்படி உத்தரவிட்டு நித்திரை செய்துவிட்டார். சிறிது நேரம் சென்றதும் சமையற்காரன் அடுத்தாளிடம் வந்து சாக்கரைப் பொங்கல் தயாரிக்கச் செலவுக்கு ரூ. ௨ தரும்படி கேட்டான். அதற்கு அடுத்தாள் "விருந்தினர் கூட இல்லாமல் ஒருவருக்கு இடை வேளைச் சிற்றுண்டிக்கு இரண்டு ரூபாய் செலவு செய்வது அதிகம்; மேலாள் உத்தரவில்லாமல் நான் கொடுக்கமுடியா"தென்று சொல்லிவிட்டான். துயில் நீங்கி எழுந்த துரைச்சாமி சமையற்காரனை யழைத்து சர்க்கரைப் பொங்கல் தயாராகி விட்டதா வெனக் கேட்டார். சமையற்காரன் அடுத்தாள் ரூபாய் கொடுக்க முடியாதென்று சொல்லி விட்டதாகப் பதிலளித்தான். இவ்வார்த்தையைக் கேட்டதும் சமையற்காரன் பேரில் ரௌத்ராகாரமாய்க் கோபித்துக் காபி டம்ளரை அவன் முகத்தில் எறிந்துவிட்டு அடுத்தாளையழைத்து 'ஏன் ரூபாய் கொடுக்கவில்லை?'யென்று துரைச்சாமி கேட்டார். அதற்கு அடுத்தாள் 'தங்கள் உத்திரவில்லாமல் கொடுக்க முடியாதென்று சொன்னேன்; இப்பொழுது உத்திரவானாலும் கொடுக்கிறேன்' என்றான். உடனே அவருக்கு அடக்க முடியாத கோபமுண்டாகித் தனக்குத் தோன்றியபடியெல்லாம் அடுத்தாளைப் பேசியது மல்லாமல் கோபம் அடங்காமையினால் அருகிலிருந்த ஓர் மூங்கிக் கழியை யெடுத்து, அடுத்தாளின் முதுகுத்தோல் பிய்ந்து ரத்தம் பெருகக்கழி ஒடிந்து போகும் வரையில் அடித்தார். அடி பொறுக்கமாட்டாமல் அடுத்தாள் கூச்சலிட்டதின் பேரில் பக்கத்து வீட்டுக்காரர்கள் ஓடி வந்து துரைச்சாமி கையிலிருந்த ஒடிந்துபோன மூங்கிக் கழியைப் பிடுங்கி மேலும் அடிக்கா வண்ணம் செய்து வைத்தனர். அடிபட்ட அடுத்தாள் ஷை துரைச்சாமியின் நெருங்கிய நண்பரான (சீக்கோன் உ. ராம. மெ.சு. மெ கடையின் ஏஜண்டு) கள்ளர் வகுப்பைச் சார்ந்த சுப்பையா என்பவரிடம் போய் முறை யிட்டான். சுப்பையா அடிபட்டவனுடைய ரத்தக் காயங்களுக்கு வேண்டிய சிகிச்சை செய்து, அவனை வெளியில் போய் மற்ற நகரத்தார்களிடம் சொல்லாமலிருக்கும்படி செய்து விட்டு, தாம் தமது நண்பரான துரைச்சாமி வீட்டுக்குப் போய் விசாரித்ததில் ஷை துரைச்சாமி அங்கில்லாததால் மற்றவர்களை விசாரித்து உண்மையைத் தெரிந்து கொண்டு இந்தமாதிரி அக்கிரமமான காரியம் செய்யலாமா வென்று அங்கிருந்தோரைக் கோபித்துக் கொண்டு, துரைச்சாமி வந்ததும் தன் வீட்டுக்கு வரும்படி சொல்லிவிட்டு வந்து விட்டார். சொல்லி வந்தும் ௫ நாள் வரையில் துரைச்சாமி சுப்பையாவை வந்து கண்டு கொள்ளாததால், சுப்பையாவுக்கு துரைச்சாமிமேல் கோபம் ஏற்பட்டு அடிபட்ட அடுத்தாளைக் கூட்டிக் கொண்டு சில நகரத்தார்களிடம் போய், "துரைச்சாமிமேல் கண்டவாறு இவனை அடித்துவிட்டான் அடிபட்ட இடத்தில் நான் உடனே போய் விசாரித்ததில் அடித்தது உண்மையென்றே தெரிந்தது. இவ்விதம் அக்கிரமம் செய்த ஒருவனை நகரத்தார்கள் கேட்க வேண்டு"மென்று சொல்லி ஷை அடுத்தாளையே எல்லா நகரத்தாரையும் கூட்டிவைக்கும்படி சொன்னார். அடுத்தாளும் எல்லா நகரத்தாரிடமும் தனித்தனியே போய் நடந்த சங்கதியைச் சொல்லி நகரக் கூட்டம் கூடி கேட்டுத்தர வேணு மென்று கேட்டுக் கொண்டான். நகரத்தார்கள் அதற்கு ஒத்துக்கொள்ளாமல் "உன்னை உன் மேலாள் அடித்ததற்கு நீதான் பார்த்துக் கொள்ள வேண்டுமே தவிர நகரக் கூட்டம் கூட சௌகரியப்படா"தென்று சொல்லிவிட்டார்கள். தனக்கு ஒருவரும் துணையில்லாமையை நினைத்து தான் எப்படியாவது இவ்வூரை விட்டுத் தப்பித்துக் கொண்டு போனால் போது மென்றெண்ணி ஷை அடுத்தாள் நகை அண்டிமென் தஸ்தாவேஜிகளை ஒத்துக் கொண்டு தன்னை விலகிவிடும்படி துரைச்சாமியைக் கேட்டான். அதற்கும் அவர் (துரைச்சாமி) ஒத்துக் கொள்ளவில்லை. ஆகவே அவ்வடுத்தாள் மறுபடியும் நகரத்தார்களிடம் வந்து ரெம்பவும் முறையிட்டு எல்லா நகரத்தார்களையும் தெண்டாயுதபாணிக் கோயிலில் கூட்டி வைத்தான். கூடியிருந்த நகரத்தார்கள் துரைச்சாமிக்கு ஆளனுப்பிக் கூட்டி வந்து "நீர் அடித்தது உண்மைதானா? ஏன் அடித்தீர்" என்று கேட்டார்கள். "அடித்தது உண்மைதான். இதற்காக நகரத்தார்கள் கூட்டம் கூடி கேட்பது முறையல்ல" வென்று கூறினார். அதற்கு மறுமொழி கூறுவண்ணம் நகரத்தார்கள் யோசனை செய்து கொண்டிருந்தனர். அவ்வமயம் சில நகரத்தார்கள், துரைச்சாமியைத் தனித்துக் கூட்டிப்போய் 'ஒரு அடுத்தாளை ஒரு மேலாள் ரத்தம்வர அடிப்பதென்பது மிகத் தவறான காரியம். ஏதோ கோபத்தினால் செய்து விட்டாய். இனி அடுத்தாளிடத்தில் நகை அண்டிமென் தஸ்தாவேஜிகளை ஒத்து வாங்கிக் கொண்டு அவனை விலகி விடும்படி வற்புறுத்திக் கூறி, இது விஷயத்தையும் நகரத்தார்களிடம் சொல்லி விட்டுப் போகும்படி கூறினார்கள். அதற்கு துரைச்சாமி ஒத்துக் கொண்டு நகரத்தாரிடம்சொல்லப்போகும்சமயம் அவர் ஆப்த நண்பரான உ. ராம. மெ. சு. மெ. சுப்பையா துரைச்சாமியை யழைத்து "நமது கடையில் நடந்த சம்பவத்தை நகரத்தார்கள் கேட்க வேண்டியது மில்லை; நீ நகரத்தாரிடம்ஒன்றும் சொல்ல வேண்டியது மில்லை"யென்று கூறிவிட்டார். இதனையறிந்தநகரத்தார்கள் கூட்டத்தைப் பெருக்கிக் கொண்டு போய் விட்டார்கள்.

இது நிற்க, மூன்றுநாள் சிலர் சேர்ந்து துரைச்சாமி ஏஜண்டாயுள்ள கடை நீங்கலாக மற்றைக் கடைகளில், கடைக்கு ஒரு ரூபாய் வாங்கி தெண்டாயுதபாணிக்கு ஒருஅபிஷேகம்செய்வித்தார்கள். அன்று சாயந்திரமே சில கணக்கப் பிள்ளைகளையும், சமையற்காரர்களையும் பர்மாக்காரப் போக்கிரிகளையும் சுப்பையாவும் துரைச்சாமியும் சம்புகளுடன் தயாராகக் கொண்டு வந்து தீபாராதனை நடக்கும்போது கலகம் செய்ய வேண்டிய நோக்கத்துடன் கோவிலின் பின்பக்கங்களிலும் முன் பக்கங்களிலும் தயாராக வைத்திருந்தனர். இதனை யறியாத நகரத்தார்கள், வழக்கம்போல் ராத்திரி சுமார் ௮-௩௦ மணிக்கு யெல்லோரும் கோவிலுக்கு வந்து பூஜகரிடம் சுவாமிக்குத் தீபாராதனை செய்யும்படி சொன்னார்கள். பூஜகர் சுவாமிக்குத் தீபாராதனை செய்ய மணியைஎடுத்து அடித்தவுடன் துரைச்சாமி திடீரெனத்தோன்றி, பூஜகர் கையில் அடித்துக்கொண்டிருந்த மணியைப் பிடுங்கிக்கொண்டு, "எனக்கு விவகாரம் இருக்கிறது; ஆனதால் சுவாமிக்கு பூஜை செய்யக்கூடா"தென்று கூறினார். நகரத்தார்கள் "நாங்கள் சுவாமிக்கு உபயம் செய்கிறோம் யார்வேண்டுமானாலும்செய்துகொள்ளலாம். ஆனால் நாங்கள் செய்வதை நீர் தடுப்பது முறை யல்ல"வென்று எவ்வளவோ சமாதானம் சொல்லிப்பார்த்தும் பிரயோஜன மில்லை. ஒழுங்கென்பதே யென்னவென் றறியாத துரைச்சாமி ஒன்றுக்கும் சம்மதியாமல் கலகம் செய்யும் நோக்கத்துடன், வெகுநேரம்வரை

(௮-ம் பக்கம் பார்க்க.)



சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்தனைப் போது மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே.
—அருணகிரிநாதர்.

குமரன், காரைக்குடி.
ரக்தாக்ஷி ஸு மார்கழிமீ உசஅ

## பர்மா மகாநாடு.

உ

இம் மகாநாடு இனிது நடைபெற்றது. அபிப்பிராய பேத மெதுவுமின்றி எல்லாத் தீர்மானங்களும் ஏகமனதாகவே நிறைவேறி யிருப்பதறிந்து மகிழ் வெய்துகிறோம். மகாநாட்டின் நடவடிக்கைகள் நமக்குக் கிடைத்தவரை வெளியிட்டிருக்கிறோம். சங்கத் தலைவர் ஸ்ரீமாந் சா. அ. ராம. சாமிநாதன் செட்டியாரவர்களது அரிய சொற்பொழிவின் எஞ்சிய பாகம் முதற் பக்கத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது. ஸ்ரீமாந் சாமிநாதன் செட்டியாரவர்கள் சமாதான நோக்கமும், பெருந்தன்மையும், உறைத்த சமயப்பற்றும், தெய்வபக்தியும், சமூகாபிமானமு முடையவர்கள். அவர்களுடைய உபந்யாசமும் அழகுபெறத் திகழ்கிறது. மகாநாட்டுத் தலைவரின் உபந்யாசமும் இவ் வுபந்யாசமும் பெரும்பாலாக ஒத்திருக்கின்றன. தொண்ணூற்றுநூர்க்கூட்டத்தைப்பற்றி மகாநாட்டில் ஒரு அரிய தீர்மானம் செய்யப்பெற்றிருக்கிறது. அதில், "தொண்ணூற்றுநூர்க் கூட்டத்தைப் புதிய முறையில் மறுபடியும் கூட்டவேண்டு" மென்று குறிப்பிடப் பெற்றிருக்கிறது. இதனைப் பற்றிச் சிறந்த சமூகாபிமானிகளான பலர் பேசியுமிருக்கிறார்கள். இத் தீர்மானத்தைப்பற்றி மகாநாட்டின் தலைவர் உபந்யாசத்தில், "கூட்டங் கூடுவது மிகச் சிறந்தது. தீர்மானங்களைத் திரம்பட நடாத்தும் முறைகளை முன்னரேகாணவேண்டும்" என்று குறிப்பிடப் பெற்றிருப்பதும் கவனிக்கத்தக்க தாகும். வீண் கூட்டங் கூடிக் கலைவதில் பயனில்லை யென்பதை எவர்தான் மறுக்க முடியும்? சங்கத் தலைவர் ஸ்ரீமாந் சாமிநாதன் செட்டியாரவர்கள் தமது உபந்யாசத்தில் "தொண்ணூற்றுநூர்க் கூட்ட முயற்சி சமூகத்திற்குப் புத்துயிர் கொடுத்தது போலாகும்" என்ற பொன்னுரைகளை வழங்கியிருக்கின்றனர். அதிலும் தீர்மானங்கள் உரம் பெற்றிருப்பதற்குத் தற்காலத்திற்கேற்ற முறையில் வேண்டுவனசெய்ய வேண்டு மென்று குறிப்பிட்டிருக்கிறார்கள். சமூகம் இன்றிருக்கிற நிலையை யுணர்ந்து தொண்ணூற்றுநூர்க் கூட்டங் கூட்ட வேண்டுமென்று செய்யப்பட்டிருக்கும் இத் தீர்மானத்தை மகிழ்ச்சியோடு வரவேற்கிறோம். முன் நடைபெற்ற தொண்ணூற்றுநூர்க் கூட்டத்தின் தீர்மானங்கள் நடைமுறையில் வருவதற்காக எந்த ஏற்பாடும் செய்யப்பெறவில்லை. வாலிபர்கள் சென்று மறியல் செய்ததையன்றி வேறு ஏற்பாடுகள் திறமையாகச் செய்யப்படவில்லை. ஊர்ப் பொதுவில் நகரத்தார் கேட்கவேண்டியது என்ற முறையில் தானிருந்து வந்தது. அம் முறை இதுகாலை கவனிக்கப் பெறுதல் வேண்டும். அதுவும் திறமையாக இருக்கவேண்டு மென்று மகாநாட்டு முகமாகக் கூறியிருப்பது போற்றத்தக்கதாகு மன்றோ?

பெண் கல்வியைப்பற்றிச்சங்கத் தலைவர் கூறியிருக்கும் கருத்துக்கள் மிக நன்றாக விருக்கின்றன. நமது சமூக இயக்கத்திற்கு உயிர் நாடியாக விருப்பது பெண்கல்வியே யென்பது பலரறிய வேண்டியதாகும். அதற்குப் பெருமுயற்சி செய்தல் வேண்டும். காலம் பார்த்திருக்கின்றோம். பெண் கல்விக்கு விசேஷ முயற்சி செய்யாத வழி சமூகத் திருத்தங்கள் எளிதாக முற்றுவதும் தீர்மானங்கள் நிலைப்பதும் எளிதான காரியங்களன்று. இதனை ஒவ்வொரு சமூகாபிமானியும் பசுமரத்தாணி யென மனதிற் பதித்தல் வேண்டும்.

பர்மாவிலுள்ள நம்மவர்களின் கடைகளில் ஒருவருக்கொருவர் வட்டத்திற்குக் கொடுத்து வாங்குவதில்லையென்றும், பாங்கியிலன்றி மற்றவர்களிடம் உட்கையெழுத்து டிஸ்கவுண்டு உண்டியல் எழுதுவதில்லை யென்றும் ஒரு தீர்மானஞ் செய்யப்பட்டிருக்கிறது. இத் தீர்மானமானது மிகக் கௌரவந் தரத்தக்கதென்று நாம் கூறவேண்டுவதில்லை. சங்கத்தின் அபிவிருத்திகளைப் பற்றியும், தொழில் வசதிகளைப் பற்றியும், அரசியலாதிக்கத்தில் நம்மவர் கலந்துகொள்ளுவதைப்பற்றியும் பல தீர்மானங்கள் செய்யப் பெற்றிருக்கின்றன. ரங்கூனிலுள்ள நம்மவர் கலாசாலையை உன்னதஸ்திதிக்குக்கொண்டு வரவேண்டுமென்ற தீர்மானம் இத்தனைக்கும் உயிர் கொடுப்பதாக விளங்குகின்றது. நம்மவரிற் பெரும்பாலார்க்குப் படிப்பில்லை யென்று கூறிப் பலரும் அலட்சியப் படுத்துகிறார்களென்பதை யாவரும் அறிவர். இம்மாதிரியான கலாசாலைகள் பல நம்மவர் வசிக்கும் ஊர்கட்குத் தக்கவாறு ஏற்படும்படி ஆங்காங்குள்ள அன்பர்கள் முயலவேண்டு மென்று சிபார்சு செய்கிறோம்.

## எண்டிசைக் காட்சி.

### நற்பெயர்.

சென்ற பக்ஷத்தில் வெளியான "குடிநூல்" பத்திரிகையில் "நூல் சந்தா ஆராய்ச்சி" என்னும் தலைப்பில் எழுதப்பட்டிருக்கும் வியாசத்தில் பின்வரும் விஷயங்களும் காணப்படுகின்றன:—

நூல் சந்தா திட்டத்தை நிறைவேற்றி வைப்பதற்குத் திறமையான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கும் இடங்களுள் மதுரை, செட்டிமார்நாடு இவ்விரண்டையும் சிறப்பாகக் குறிப்பிடலாம். நூல் சந்தாதாரரின் தொகையில் மதுரையும், நூல்நயத்தில் செட்டிமார்நாடும் தமிழ் நாட்டில் தலைமை ஸ்தானம் வகிக்கின்றன. செட்டிமார் நாட்டில் நூல் சந்தாக்கள் காரைக்குடி "தனவைசிய ஊழியன்" ஆசிரியர் ஸ்ரீமான் ராய. சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்களால் சேகரிக்கப்பட்டு இக் காரியாலயத்துக்கு அனுப்பப்படுகின்றன. மாதந்தோறும் நூல் சந்தா அனுப்பியவர்களின் பெயர்கள் "தனவைசிய ஊழியன்" "குமரன்" பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படுகின்றன. சo நம்பருக்கு மேற்பட்ட நூல் அனுப்பியுள்ள கூ௫ சந்தாரரின் பெயர்களைமேலே பிரசுரித்திருக்கிறோம். அவர்களில் ககூ பேர் செட்டிமார்நாட்டைச் சேர்ந்தவர்கள். பட்டைப்போல் டளபளப்புடன், கண்களைக் கவரும்வனப்புவாய்ந்தன்வாயுள்ள செட்டிமார்நாட்டுநூற் சுருள்களைக்கண்டவர்கள் வெளிநாட்டுத்துணிகளின்மீது ஒருக்காலும்மோகங் கொள்ள முடியாது. இவ்விஷயத்தில் செட்டிமார்நாடு இவ்வளவு முன்னேற்ற மடைந்ததற்கு வேந்தன்பட்டி ஸ்ரீமான் எம். சொக்கலிங்கஞ் செட்டியாரின் அரிய தொண்டே ஒரு முக்கிய காரணமாகும்.

இவற்றால் நமது பகுதியில் நூல் நூற்றுவரும் சகோதரர்க்கு மேன்மேலும் ஊக்கம் பிறக்குமென்று நாம் கூற வேண்டியதில்லை. நூல் நயத்தில் மட்டுமன்றி எண்ணிக்கையிலும் முதலாவதாக முயலவேண்டும்.

### தனவைசிய நாடு.

நாட்டுக்கோட்டையார் வாழ்ந்து வருகிற இப்பகுதியைப் பலர் "செட்டி நாடு" என்று வழங்குகின்றனர். இம்மாதிரி வழங்குவதை நாட்டுக்கோட்டை மரபினர் வெறுக்கின்றனர். "செட்டி" என்ற சொல்லைத் தமிழறிந்தவர் உபயோகிக்கும்போது "செட்டிமார்" "செட்டியார்" என்று வழங்குவது மரபு. அவ்வாறன்றிச் சில நிருபர்களும் சில பத்திராசிரியர்களும் "செட்டிநாடு" "செட்டிகள்" என்று பிரயோகஞ்செய்து வருகின்றனர். இம்மாதிரி அவர்கள் வேண்டு மென்று செய்யவில்லையாயினும் எம்மவர்க்கு அப்படியெழுதுவது விருப்பமில்லாததோடு வருத்தமுமுண்டாக்குகிறபடியால் இனி இப்பகுதியைக்குறிக்கும்போது 'தனவைசிய நாடு' எனவும், 'செட்டிமார்' 'நாட்டுக் கோட்டையார்' 'நகர வைசியர்' என்ற சொற்களை உபயோகிக்குமாறு வேண்டுகின்றோம். கடிதங்களைப் பதிப்பிக்கும்போது பத்திராதிபர்கள் சிறிது கவனஞ் செலுத்த வேண்டு மென்றும் வேண்டுகிறோம்.

### வளர்த்தகடா — — மார்பில் பாய்கிறது.

பர்மா புரோம் ஜில்லாவிலுள்ள ஜீக்கோனில் நடைபெற்ற ஒரு சம்பவம் மற்றொரு பக்கத்தில் வெளியாகி யிருக்கிறது. அதனைப் படிக்குமொவ்வொருவரும் மிக்க வருத்தமடைவ ரென்பது திண்ணம். சர்க்கரைச்சோறு இல்லாததற்காக ஒருபையனை அடித்து நொறுக்குவதென்பதுபொறுக்க முடியாத அநியாய மாகும். இம்மாதிரியான முரட்டுச் சாப்பாட்டு ஆசாமிகளைக் கடைகளுக்கு மேலாளாக இருக்கச் செய்வதும் அவர்கள் வசத்தில் லட்சக்கணக்கான பொருளைக் கொடுத்து நிர்வாகம் செய்யச் சொல்வதும் நமது துரதிருஷ்டவசமே யாகும். இப்படி யடித்தவொருவரை யாவரும் புறக்கணித்து அவருக்குப் புத்திவருமாறு செய்த லவசியமாகும். இவருடன் சில கணக்கப்பிள்ளைகள் சேர்ந்து நகரத்தாருக்கு விரோதமாகத்தவறிய முறையில் செல்கிறார்களென்றறிந்து வருந்துகிறோம். இவ் விஷயத்தில் ஜாதியபிமானங் காட்டுவது பெருந்தவறாகும். அடித்தவரும் அடிபட்டவரும் நாட்டுக்கோட்டையார் வகுப்பினர்களல்லர். அடித்தவர் செய்தது அக்கிரமம். அடிபட்டவர்க்காக நகரத்தார் பரிந்து கேட்டிருக்கிறார்கள். இதில்மற்றக்கணக்கப்பிள்ளைகளும் சேர்ந்து அக்கிரமம் செய்தவரையொறுக்க வேண்டியது நியாயமாயிருக்க, நகரத்தாருக்கு விரோதமாகக் கட்சி திரட்டுவது நேர்மை யன்று. விரைவாக இவ்வேற்றுமையை ஒற்றுமைப்படுத்தத் தரமுள்ள கணக்கப்பிள்ளைகள் முன்வருதல் அவசியமாகும்.

## உள்ளூர்.

### சுகாதார சிசுவாரக் கொண்டாட்டம்.

இவ்வருஷம் ஷை கொண்டாட்டத்தை நடத்த ஏற்பாடுகள் செய்வதற்காக ௩-௧-உ௫-ல் மகா-ள-ள-ஸ்ரீ ராவ்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்களால் பொதுஜனக் கூட்டம் கூட்டப்பெற்றது. மகா-ள-ள-ஸ்ரீ ஏ. ராமானுஜ அய்யங்காரவர்கள் அக்கிராசனம் வகித்தார்கள். கீழே கண்ட தீர்மானங்கள் சபையாரால் அங்கீகரிக்கப்பட்டன:— க. இவ்வருஷத்தில் ஜனவரி மீ கஉ-ம் தேதி தொடங்கி ஒரு வாரத்திற்கு ஷை கொண்டாட்டத்தைஇவ்வூரில்நடத்துவது. உ. அதினுடைய செலவுக்காக சுமார் ௫00 ரூபாய்கள்வரை சந்தா மூலம் சேகரிப்பது. ௩. ஷை கொண்டாட்டத்தை நடத்தவும் சந்தா சேகரிக்கவும் அடியிற்கண்ட கனவான்கள் கமிட்டி மெம்பர்களாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள். (a) இவ்வூர் யூனியன் போர்டு அங்கத்தினர்கள். (b) பெஞ்சு கோர்ட்டு கௌரவ மாஜிஸ்ட்ரேட்கள். (c) டாக்டர்கள். (d) கவர்ன்மெண்டால் அங்கீகரிக்கப்பட்ட இவ்வூர் கலாசாலைகளின் தலைமை ஆசிரியர்கள். (e) இவ்வூரில் உள்ள பி. ஏ. பட்டம் பெற்றவர்கள். (f) மேலே கண்டவர்களால் சேர்த்துக் கொள்ளப்படும் இதர கனவான்கள். ௪. அடியிற் கண்ட கனவான்கள் ஷை கமிட்டியின் உத்தியோகஸ்தர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்:—

மகா-ள-ள-ஸ்ரீ சு. அ. சு. ராம. ராமநாதன் செட்டியாரவர்கள், தலைவர்.
,, என். எஸ். வெங்கிட்டராமய்யர் அவர்கள் எம். ஏ. எல். டி., காரியதரிசியும் பொக்கிஷதாரும்.
,, டி. எஸ். ஸ்ரீநிவாசய்யரவர்கள் சுகாதார இன்ஸ்பெக்டர், உபகாரிய தரிசி என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

சென்ற திங்கள் வாரகாலத்தில் இதன் பொருட்டு ஒரு கூட்டம் கூடியது. கவர்ன்மெண்டார் அனுப்பியிருந்த சுற்றுக் கடிதத்தில் கண்ட உத்தியோக வகுப்பார் முதலியவர்களைப் பெயர் குறிப்பிடாமல் கமிட்டி மெம்பராக இருக்க வேண்டுமென்று தீர்மானிக்கப் பெற்றது. ஆனால் இந்தக் கூட்டத்திற்கு வரும்படி பொது ஜனங்களை எதற்காக அழைத்தார்களென்பது தெரியவேண்டும். இதில் அதிகாரம் பெற்றவர்களாகவே ஒரு கூட்டம் கூடியிருக்கலாமல்லவா? ஊக்கத்துடன் நடத்தினவர்களும் கலந்து கொள்ளும்படி சென்ற வருஷம் இடங் கொடுக்கப்பட்டது. இந்த வருஷம் குறுகி விட்டது போலும்! இதை நடத்திவைக்கும் பேறு பெற்றுள்ள உத்தியோகஸ்தரில் எவரும் இக்கூட்டத்திற்கு விஜயஞ் செய்யவில்லை. இதில் விருப்பங் கொண்டு வந்தவர்கள் புறக்கணிக்கப் பட்டார்கள். பணம் வசூலிக்கும்போது அந்தக் கூட்டத்தினருள் வரி வைத்து வாங்குவார்களென்று நம்புகிறேன் என்று மற்றொரு நிருபர் எழுதுகிறார்.

ஹிந்துமதாபிமான சங்கம்:—இனிமேலும் ரக்தாக்ஷி ஸு மார்கழிமீ உகூ௨ (கூ-க-உ௫) வெள்ளிக்கிழமை மாலை ௬-மணிக்கு ஸ்வாமி விவேகாநந்தரது பிறந்த தினக் கொண்டாட்டம் நடைபெறும். அவ்வமயம், புதுக்கோட்டை சமஸ்தானக் கல்வியிலாகா அத்யக்ஷர் (ஸ்கூல்சூப்பரின்டெண்டெண்ட்) ஆகிய ஸ்ரீமான் பி. வி. சங்கர ராமேச்வர ஐயர், பி. ஏ. அவர்களது தலைமையில் ஷை சமஸ்தான உயர்தரக் கலாசாலைத் தலைமையாசிரியர் ஸ்ரீமான் கே. ஆர். வெங்கட்ராமையர் பி. ஏ. எல். டி. எம். ஆர். ஏ. எஸ். அவர்களும், திருச்சி டிஸ்ட்ரிக்ட் போர்டு காரியாலய உத்தியோகஸ்தர் ஸ்ரீமாந் டி. வி. காந்திமதிநாதபிள்ளை அவர்களும், உபந்யசிப்பார்கள். அன்பர்கள் நல்வரவு. .....என்று தரிய்ததில் ஆசிக்கிறோம்.

(ரு-ம் பக்கத் தொடர்ச்சி.)

யில் பூஜை நடக்கவொட்டாமல் தடை செய்துகொண்டிருந்தான். நகரத்தார்கள் வேறு வழியில்லாமல் போலீசில் பதிந்துவைக்க ஏற்பாடு செய்தார்கள். இது தெரிந்ததும், துரைச்சாமியும் சுப்பையாவும் கலகம்செய்வதற்காகக் கூட்டி வந்தவர்களை அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள். உடனே அவர்கள் மற்றெல்லாக் கடை கணக்கப்பிள்ளைகளையும் அழைத்து உ. ராம. மெ. சு. மெ. கடையில் கூட்டம்கூடி, இனிமேல் ஒரு கணக்கப்பிள்ளையும் கோவிலுக்குப் போகக் கூடாதென்றும் இன்னும் சில ரகசியமான தீர்மானங்களும் செய்து கொண்டார்கள். அதுமுதல் சில யோக்கியமான கணக்கப்பிள்ளைகள் தவிர மற்ரோர் கோவிலுக்கு வருவதில்லை. சுப்பையா, துரைச்சாமியின் வார்த்தைக்குக் கட்டுப்படாமல் கோவிலுக்குப் போகிறவர்களையும் அவர்கள் போகாம லிருக்கவேண்டிய முயற்சிகள் செய்து வருகின்றனர்.

விஷயங்க ளிவ்வாறிருக்க, கட்டுப்படாத கணக்குப் பிள்ளைகள் கூடி, பகிரங்கமாகவும் அந்தரங்கமாகவும் நகரத்தார்களில் பிரபலமானவர்களை தூஷணையாகப் பேசுவது மல்லாமல் துராக்கிரமமான செயல்கள் நிகழ்த்துவதாகவும் (பீதியுடையும் வண்ணம்) தீர்மானித்திருப்பதாகத் தெரிய வருகிறது.

ஜாதிமதங்களைச்சிறிதும் கவனியாது எல்லோரையும் சகோதர பாவமாக நினைத்து, நல்வழியில் நடக்கப்போதித்து நடத்திவரும் நம்மை, நம்மிடம் ஊழியஞ் செய்துவரும் ஜாதித் துவேஷம் கொண்ட கள்ளர் வகுப்பைச் சார்ந்த சில துஷ்டர்கள் அடக்கியாள வேண்டுமெனும் கருத்துக்கொண்டு, காரணமில்லாத சில அற்ப விஷயங்களில் தலையிட்டு, இவ்விதம் அசம்பாவிதமான காரியங்களைச் செய்தும், பத்திரிகைகளில் தாங்கள் சரீரவலியையுடையோர்க ளென்றும் தனமுடையோரைச் சேராதிருத்தல் இயலுமென்றும், தனமுடையோர் நாம் அவர்களைச் சேராவிட்டால் துன்பம் அனுபவிக்கவேண்டி வருமென்றும் கூறியும், சில துஷ்டர்களைச் சேர்த்துக் கொண்டு கக்ஷி திரட்டியும் வருகிறார்கள். இவ்விதக் காரியங்கள் நிகழ்வதால், இவைகளை நினைக்க மனதுக்கு அருவெறுப்பாகவும் கவலைக்கிடமுள்ளதாகவும் இருக்கிறபடியால், இவைகளை நன்றாய் கண்டிப்பதுடன் பொய்யாகவும் புரட்டாகவும் எழுதியுள்ள வியாசங்களுக்குமறுப்பும் எழுதும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

பின் நிகழ்ச்சிகளாவன:

சேக்கோனில் விலகிக் கொண்டுபோன கணக்குபிள்ளைகளும் சமையற்காரர்களும் சேர்ந்து (சுமார் ௭0 பேர்வரையில்) ஓர் தனிமையான வீடு பிடித்து அதில் தங்களுக்கு வேண்டிய சமையல் முதலியவைகள் நடத்திக்கொண்டு வருகின்றனர். அவர்களுடைய முக்கிய வேலைகள், பக்கத்திலுள்ள நத்தீன், பவுண்டை, ஓதிக்கோன், சூப்பிங்கன், அவுப்போ முதலிய ஊர்களுக்குப்போய், கணக்குப்பிள்ளைகளாயுள்ளவர்களையும் சமையற்காரர்களையும் உடனே விலகிக் கொண்டு தங்களுடன் வந்து சேரும்படிக்கும் சாப்பாடு முதலியவைக்கு தாங்கள் பார்த்துக்கொள்வதாகவும் தீவிரமான பிரசாரஞ் செய்து ஆள் திரட்டி வருகின்றனர். நிலைமை எந்த நிமிஷமும் பெரியதோர் கலகம் நடக்குமோவென அஞ்சத்தக்கதாயிருக்கின்றது. சாப்பாட்டு வகையறுவுக்குச் சிலவு உட்கண்ட உ. ராம. மெ. சு. மெ. சுப்பையாவும் பெ. ரி. சொ. துரைச்சாமியும் கொடுத்து வருகின்றனர்.

## இரங்கூன் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம்.

இம்மதி கஉ, கஙு-ந்தேதிகளில் இரங்கூனை அடுத்துள்ள திருக்கம்பையில் நமது நாட்டுக் கோட்டை செட்டியார்களின் மகாநாட்டில் நமது இளைஞர் சங்கப்பிரதிநிதியான திருவாளர் வெ. கண. வெ. சொக்கலிங்க ஐயா அவர்கள் கீழ்க்கண்ட தீர்மானத்தைக் கொண்டு வரத் தோங்குவா அழ- சுப. பழ. பழனியப்ப செட்டியா ரவர்கள் ஆமோதிக்க டையூ இராமசாமிச் செட்டியாரவர்களும் லேப்படான் அரு. அ. சு. சாமிநாதன் செட்டியாரவர்களும் சொற் சுவை நிரம்பிய பிரசங்கத்துடன் ஆதரிக்க எல்லோராலும் மிகுந்த குதூகலத்துடன் "தனவைசியர்கட்கு ஜேய்!" என்ற இளைஞர் சங்கத்தாரின் கோஷத்தினிடையேதீர்மானம் நிறைவேறியது.

மேலும் அவ்விரண்டு தினங்களிலும் மகா நாட்டில் கடவுள் வாழ்த்துக் கூறும் பாக்கியமும் பர்மாவிலுள்ள நமது குலத்தவர் யாவருக்கும் ஒருங்கே கதரால் செய்யப்பெற்ற வீர உடை தரித்து தொண்டு செய்யும் பாக்கியமும் நமது இளைஞர் சங்கத்தாருக்குக்கிடைத்தமைக்குகுகப்பெருமானின் திவ்ய சரணாரவிந்தங்களில் எனது முடியைப் பொருத்துகின்றேன்.

### தீர்மானம்.

"நம் தாய் நாட்டில் "இரண்டாயிரம் வாலிபர்கள் விவாகத்திற்கு வகையின்றித்தவிக்கின்றார்கள், வீண்செலவு கணக்கின்றி ஏறிக்கொண்டே போகின்றது. இவைகட்கு வழி பிறப்பிப்பதற்காக தொண்டூற்றுனார்க் கூட்டத்தை மறுபடியும் கூட்டி அவைகட்கு வேண்டுவன செய்தல் வேண்டும் என நமது தேயத்தில் உள்ள தலைவர்களையும் ஊழிய சங்கத்தாரையும் மற்றுமுள்ள அன்பர்களையும் கேட்டுக் கொள்ளல் வேண்டும்."

சா. கணேசன்,
காரியதரிசி,

## இம்மாதத்திய நூல் சந்தா.

பெல்காம் தீர்மானத்தின்படி காங்கிரஸ் அங்கத்தினருக்கு நூல் சந்தா ஏற்பட்டுவிட்டபடியால் ஆமதாபாத் தீர்மானத்தின் பிரகாரம் டிசம்பர் மாதத்துக்கு நூல் சந்தா அனுப்புவதைப் பற்றிச் சந்தேகம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிய வருகிறது. இதுகாறும் சந்தா நூல் அனுப்பி வந்தவர்கள் டிசம்பர் மாதத்துக்குரிய சந்தாவை வழக்கம் போல் இம்மாதம் கரு உக்குள் அனுப்பி வைக்கக் கோருகிறேன். அவ்வாறு வந்து சேரும் சந்தாக்களை முன் மாதங்களில் செய்தது போல் சபர்மதிக்கு அனுப்புவதா அல்லது பெல்காம் தீர்மானத்தின்படி ஏற்படும் ஜனவரி மாதச் சந்தாவாகப் பதிவு செய்து கொள்வதா என்பதைப் பற்றி அகில இந்தியக் கமிட்டியாரிடமிருந்து தகவல் கிடைக்கும் வரையில் அவை இங்கேயே நிறுத்தி வைக்கப் படும். தகவல் கிடைத்ததும் அவை அகில இந்திய காதிபோர்டுக்கோ தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டிக்கோ அனுப்புவதுடன் சந்தாதார்களுக்கும் விவரம் அறிவிக்கப்படும். பழைய சந்தாதார்க ளன்றிப் புதிதாகப் பெல்காம் தீர்மானத்தின்படி காங்கிரஸ் அங்கத்தினராவதற்கு நூல் சந்தா அனுப்ப விரும்புவோரும், தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டி கூடி இவ்விஷயமாக ஏற்பாடு செய்யும் வரையில் இக் காரியாலயத்துக்கே தங்கள் சந்தா நூலை அனுப்ப வேண்டும் என்று தமிழ்நாட்டுக் கதர் போர்டு காரியதரிசி அறிவிக்கிறார்.

## கப்பற் செய்தி

'எக்ரா' கப்பல் இரங்கூனிலிருந்து மார்கழிமீ உஉ-ம் தேதி திங்கட்கிழமை சென்னைக்கு வந்து சேர்ந்தது. உசு-ம் தேதி வெள்ளிக்கிழமை சென்னையிலிருந்து இரங்கூனுக்குப் புறப்படும்.

'டீஸ்டா' கப்பல் மலாய்நாட்டிலிருந்து தைமீ க-ம் தேதி செவ்வாய்க்கிழமை சென்னைக்கு வந்து சேரும். ௬-ம் தேதி ஞாயிற்றுக் கிழமை நாகையிலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும்.



(௪-ம் பக்கத் தொடர்ச்சி.)

பிடித்து சீதையை வண்டியில் தூக்கிப்போட்டு செல்வராஜ புரத்திற்குக் கொண்டு வந்து வீட்டில் இறக்கினார்கள். ஒரு வேலைக்காரியை அமர்த்தி வேண்டியதைச் செய்தார் ராமநாதன் செட்டியார். நாயகன் ரங்கநாதன் செட்டியாருக்கு ஆளனுப்பி மனைவியின் நிலையைத் தெரிவித்தார்கள். அவர் 'நான் ஊரிலில்லையென்று சொல்லி விடு' என்று தாஸி வீட்டிலிருந்து பதிலனுப்பினார். அன்று பொழுது போய் விட்டது. மறுநாள் இரவு நாலு மணி சுமாருக்குச் சீதை உயிர் துறந்தாள். உடனே ராமன் சென்று ரங்கநாதரை அழைத்து வந்தான். பங்காளிகளும் வந்தார்கள். ஊரிலுள்ள பெண்மக்களிற் பெரும்பாலார் வந்திருந்தனர். இறந்த பெண்ணின் குண நலத்தைப் பற்றியும் அதற்குற்ற பரிதாப நிலையைப்பற்றியும் மாமியிடத்திலும் புருஷனிடத்திலுமிருந்து பட்ட கஷ்டங்களைப் பற்றியும் இரங்கிப் பேசினார்கள்.

ஒருத்தி:—சீதை இறந்து விட்டாளே! இனி இந்தச் செட்டியாருக்கு மறுதாரங் கொள்ளக் கிடைக்குமா? பணம் நிரம்ப இருக்கிறதாம்!

மற்றொருத்தி:—இவனுக்குக் கிடைக்குமா? இவன் தேவடியாளைக் கட்டிக் கொண்டழுகிறானே! யாராவது இவனுக்குப் பெண்ணைச் செய்வார்களா?

வேறொருத்தி:—இந்த மூதேவிக்கு யார் கலியாணம் பண்ணுவார்? இவன்தான் பெண்ணைப் பொசுக்கித் தின்று விடுவானே? அவன் மூஞ்சியைப்பாருவே! களவாணி மாதிரி குறு குறென்று விழிக்கிறான்!

இன்னுமொருத்தி:— பெண்டாட்டி செத்துப் போனாளே யென்று கண்ணில் ஒரு சொட்டுத் தண்ணீராவது வருகிறதா? எப்படி இதை விட்டுத் தப்பித்துக் கொண்டு ஓடுகிற தென்று அங்கு மிங்கும் பார்க்கிறான். இவனுக்கு ஒருத்தரும் கலியாணஞ் செய்ய மாட்டார்கள்.

இப்படிப் பலவாறாகப் பெண்கள் பேசினார்கள். மேல மாகாணம் ராமநாதன் செட்டியார் ஒரு பக்கத்திலிருந்து அழுது கொண்டிருந்தார். ஆலங்குடிக்கு ஆளனுப்பப்பட் டிருந்தது. நேரமாகி விட்டபடியால் ஒரு குதிரை வண்டியையும் அனுப்பினார்கள். 'சீதை இறந்து விட்டாள்' என்ற செய்தி யெழுதிய ஓலையைக் கொண்டு போனவன் மன்னைகட்டிக் கறுப்பன் செட்டியாரிடம் கொடுத்தான். இது மங்கல ஓலையென்பதைப் பிரிக்கு முன்னரே தெரிந்து கொண்டு புன்சிரிப்போடு வாங்கிப் பிரித்துப் பார்த்தார். பார்த்து முடிந்ததும் பெண்டாட்டியைக் கூப்பிட்டார். "ஏனிங்கிறேன்! செல்வராஜபுரத்திற்குப் போகவேண்டும். பங்காளி வீட்டைக் கூட்டிக் கொண்டு சுருக்காகப் போக வேண்டு மல்லவா?" என்றுசொன்னார். இருவருடைய முகத்திலும் சந்தோஷம் பொங்கிவழிந்தது. நித்திய தரித்திரனுக்கு லட்சம் ரூபா புதையல் கிடைத்தது போல அளவிலா மகிழ்ச்சி கொண்டார்கள். ஒன்பது வண்டிகள் கொண்டுவரப்பட்டன. பங்காளி வீடுகளிலுள்ள ஆண் பெண் அடங்கலும் வண்டிகளிலேறினார்கள். பகல் பத்து மணிக்குச் செல்வராஜபுரம் வந்து சேர்ந்தார்கள். ஆண் மக்க ளெல்லோரும் மன்னைகட்டிக் கறுப்பன் செட்டியாரை முன்னுவிட்டு வந்தனர். பெண்கள் யாவரும் தலையில் துணியைப்போட்டுக் கொண்டு கறுப்பன் செட்டியாரின் மறுதார மனைவியை முற் கொண்டு தொடர்ந்தனர். சம்பந்தியின் வீட்டு வாசலில் நுழையும் போது பொருமிப் பொருமி அழுதுகொண்டும் "ஐயோ! அப்பா! என்ன செய்வேன்! ஒரு பெண்தானே இருந்தது! அதுவும் போய் விட்டதே!" என்று இடை யிடையே சொல்லிக் கொண்டும் கைத்துண்டைக் கொண்டு நன்றாகக் கண்ணை மூடிக் கசக்கிக் கொண்டும் கறுப்பன் செட்டியார் வந்தார். பக்கத்தில் வந்தவர்கள் "மிஞ்சிப் போனதற்கு வருத்தப் பட்டென்ன செய்கிறது? போனது வரவா போகிறது? விடுங்கள்! மனதைத் தைரியப் படுத்திக் கொள்ளுங்கள்!" என்று சொல்லிக் கொண்டே வந்தனர். கறுப்பன் செட்டியாருடைய கண்ணில் கண்ணீர் வந்ததோ இல்லையோ வென்பது தெரியவில்லை. இவர்களைத் தொடர்ந்து பெண் மக்களும் பிள்ளை குட்டிகளும் வந்தார்கள். இந்தக் கூட்டத்தின் முன்னணியில் நமது கறுப்பன் செட்டியாரின் மனைவி தலையும் முகமுந் தெரியாதபடி முன்தானையைப் போட்டுக் கொண்டு வாயினுள்ளே முனங்கி யழுது கொண்டு வந்தாள். அவள் கண்ணின் நிலைமையெப்படியிருந்த தென்பதும் அறிய முடிய வில்லை. இப்படியாக எல்லாரும் வீட்டி னுள்ளே வந்தார்கள். உட்கார்ந்தவுடனே கறுப்பன் செட்டியா ரிடத்தில் வந்து பலரும் துக்கம் விசாரித்தார்கள். கறுப்பன் செட்டியாரும் பொருமினார். இனி யென்ன செய்வேன் என்று சொல்லித் திணறினார். என்றாலும் கண்ணில் வைத்த கைச் சவுக்கத்தை யெடுக்கவே யில்லை! அவர் மனைவி உள்ளே சென்றதும் பலரும் அழ ஆரம்பித்துவிட்டனர். இவளும் பிணத்தின் மேல் விழுந்து அழுதாள். முகப்பி லிருந்த பலரும் கசகச வென்று பேச ஆரம்பித்து விட்டனர். அங்கு வந்திருந்த வையாபுரி செட்டியாரும் மேல மாகாணம் ராமநாதன் செட்டியாரும் பிரபு ரங்கநாதன் செட்டியாருமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். மற்ற இருவரையும் வைத்து விட்டு வையாபுரி செட்டியார் மட்டும் எழுந்து உள்ளே வந்து "என்ன! கரு! இப்படி வரலாமா?" என்றார். அவரும் ஒரு பக்கமாக வந்தார்.

வையாபுரி செட்டியார்:—மேலே ஆக வேண்டிய தென்ன? நேற்றிரவே அடங்கின சங்கதியை வைத்து வளர்க்கப்படாது. ஏதாவது ஒருவகையாக முடித்துக் காரியத்தைப் பார்க்க வேண்டும். நீங்கள் தெரியாதவர்க ளல்ல.

கறுப்பன் செட்டியார்:—உங்களுக்கு நான் அதிகமாகச் சொல்ல வேண்டிய தில்லை. பிள்ளை இறந்து போய் விட்டது. ஏதோ நமக்குப் பொசிப்பு அவ்வளவு தான். செட்டிய வீட்டு வழக்கப்படி செய்யவேண்டியதுதான்.

வையாபுரி செட்டியார்:—இங்கே வாருங்கள். உங்களோடு பேசி வெல்ல முடியாது. ஒரு வழியாக வெட்டி விடுங்கள்!

கறுப்பன் செட்டியார்:—சாமர்த்தியமாக நீங்கள் பேசுகிறீர்கள். பெண்ணைச் சேர்ந்த சாமான் நகை பணம் முதலிய எல்லாம் வந்து விட வேண்டும். வேறே பேச்சுக் கிடையாது.

வையாபுரி செட்டியார் வெளியே வந்தார். மேல மாகாணம் ராமநாதன் செட்டியார் தோளில் கையைப் போட்டுக் கொண்டு,

வையாபுரி செட்டியார்:—வழக்கம்போல வந்துவிட்டான்போ லிருக்கிறது. பிறகு போகிற வழியென்ன?

ராமநாதன் செட்டியார்:—ஞாயமா வென்று யோசித்துப் பாருங்கள்! இந்தப் பெண் பிறந்தது முதல்

(கo-ம் பக்கம் பார்க்க.)

எல்லாக் காரியங்களும் நாங்களே செய்திருக்கிறோம். நாங்கள்தான் வளர்த்தோம். நாங்கள் அதன் தாய்க்குக் கொடுத்த பணத்தைக் கொண்டுதான் கலியாணம் முதலிய எல்லாக் காரியமும் இன்றுவரை நடத்தி யிருக்கிறோம். இவன் ஒரு காசு கொடுத்தானா? ஒரு வேளையாவது கஞ்சி ஊற்றினானா? ஒரு நாளைய சீர் முறையாவது கொடுத்தானா? இவனுடைய காசு ஒரு செம்புச் சல்லியாவது இதில் சேர்ந் திருக்கிறதா? இந்தப் பணத்தை இவன் கேட்க ஞாய மிருக்கிறதா? மேற்கொண்டு சீதை கல்யாண வீட்டில் கை லஞ்சம் வேறே வாங்கி விட்டானாம்.

வையாபுரி செட்டியார்:—ஊரும் பெரிய ஊர். எப்படியாவது பிணம் வெளியிலே போக வேண்டுமே. அவன் மூர்க்கனென்பது எல்லாருக்கும் தெரியும். பிறகு ஆக வேண்டியதைச் சொல்லுங்கள்!

இந்நிலையில் ராமனாதன் செட்டியார் என்ன செய்வார்? பாவம்! தமது மகளை மன்னைகட்டிக்குக் கல்யாணம் செய்யும்போது கொடுத்த சீதனம் முதலிய தொகைகளைத் தனிப் படுத்தித் தம் மாறலில் வைத்திருந்தார். தம் மகள் இறக்கும்போது சீதை பிறந்திரா விட்டால் அது சம்பந்தமான எல்லாப்பணமும் இவரையே சேர்ந்து விடும். வம்பு வழக்கு கிடையாது. கீழ் வார்சாகப் பேத்திப் பெண்ணொன்றிருந்தபடியால் இத்துன்பம் வந்திருக்கிறது. இதைத் தீர்க்காமல் காரிய மொன்றும் நடத்த முடியவில்லை. வையாபுரி செட்டியாரும் மற்றும் இரண்டு பெரிய மனிதரும் இருந்து பேசினார்கள். மன்னைகட்டிக் கறுப்பன் செட்டியாரை அழைத்து உங்கள் வழக்கென்னவென்று கேட்டார்கள். அவர் "இன்று இறந்துபோன பெண் என் மகள். ஆதலால் அவளுடைய சகல சொத்துக்களும் ஜாதிச் சட்டப்படி எனக்கே சேர வேண்டும். அதற்கு வழியானாலல்லது காரியங்கள் நடக்க முடியாது" என்று சொன்னார். ராமனாதன் செட்டியாரை "இதற்கென்ன ஆக்ஷேபணை சொல்லுகிறீர்" என்று கேட்டனர். அவர் "இப்பெண் என்னுடைய மகள் பிள்ளையாகும். இச்சொத்து முழுமையும் எங்கள் வீட்டிலிருந்து என் மகளுக்குக் கொடுத்தவையும் அவற்றி லிருந்து வளர்ந்த வட்டியுமேயாகும். என் மகள் இறந்து போய்விட்ட படியால் அச்சொத்துக்கள் யாவும் எனக்கே யுரிமையுடையனவாக வேண்டும். இந்தப் பெண்ணிருந்தபடியால் அதற்குக் கொடுக்கப் பட்டது. அது-இப்போது இறந்து போய் விட்டபடியாலும் என் மகளுக்கு வேறு பிள்ளைகள் இல்லாதபடியாலும் இச்சொத்து முழுமையும் எனக்கே சொந்தமானதாகும்" என்று வாதித்தார். இதற்கென்ன பதில் சொல்லுகிறீர் என்று கறுப்பன் செட்டியாரைக் கேட்டார்கள். அவர் "ராமனாதன் செட்டியார் சொல்லுவது எந்த வழியிலும் பொருத்த முடையதல்ல. அவருடைய மகள் இறந்த தினத்தில் பிள்ளை குட்டி யில்லா விட்டால் அவர் கொடுத்த எல்லாச் சொத்தும் அவருடையதாகி விடவேண்டியது நியாயந்தான். ஆனால் அன்று பிள்ளை யிருந்தபடியால் அச்சொத்து அவருக்குச் சொந்தமாகவில்லை. என்னுடைய பிள்ளைக்கே சொந்தமாகி விட்டது. அந்தப் பணத்தி லிருந்து கல்யாண முதலியன நானே முன்னின்று செய்தபடியாலும் அந்த விஷயங்களில் அவருக்குப் பாத்திய மில்லாத படியாலும் சொத்தில் அப்பொழுதே அவருக் கிருந்த பாத்தியமும் நீங்கிப்போய் விட்டது. இப்போது என்னுடைய பெண் இறந்துபோன படியால் அச்சொத்து முழுமையும் என்னைச் சேர வேண்டுமே யன்றி, ராமனாதன் செட்டியார், பேத்தி வீட்டுச் சாமானை யெடுக்க என்ன உரிமை யிருக்கிற தென்று விளங்க வில்லை" என்று வெகு அலட்சியமாக பதில் சொன்னார். இயல்பாகவே மேல மாகாணம் ராமனாதன் செட்டியார் நல்ல பணக்காரர்; மிகநல்லவர்; வம்புக்குப் பயந்தவர்; மிகுந்த மானமுடையவர். அவரைத் தனியே அழைத்துக் கொண்டுபோய் "என்னவோ தொலையட்டும். இந்த சம்பந்தமான பணம் லட்ச ரூபா யிருக்கிறதே, அதில் பாதியைத் தொலைத்து விட்டால் போகிறது. அவ்வளவு பணத்தையும் தருமத்திற்கா போடப் போகிறீர்கள்? அவனும் அதிகப் பணக்கார னில்லை. போகிறான், இரண்டு மூன்று பையன்களை வைத்துக் கொண்டு விழிக்கிறான். தொலைத்து விடுங்கள்" என்று சொல்லிச் சமாதானப் படுத்தினர். சரியென்று ரூபாய் இருபத்தெண்ணாயிரத்துக்கு உண்டிய லெழுதிக் கொடுக்கப்பட்டது. சுமார் இருபத்திராயிர ரூபா பெறுமான நகைகளையும் சாமான்களையும் எடுத்துக் கொள்ளும் படியும் சொல்லப் பட்டது. இவ்வளவு கிடைத்ததே போது மென்று மன்னைகட்டிக் கறுப்பன் செட்டியார் உள்ளுக்கு மகிழ்ச்சி யடைந்தார். இதன் பிறகுதான் காரியங்கள் நடைபெற வேண்டியிருந்தபடியால் இரவு சுமார் பன்னிரண்டு மணிக்குத்தான் சாப்பாடு நடை பெற்றது. வந்திருந்த யாவரும் ராமனாதன் செட்டியாரின் பெருந்தன்மையைப் பற்றியும் அவர் பட்ட துன்பங்களைப் பற்றியும் புகழ்ந்து பேசினார்கள். மன்னைகட்டிக் கறுப்பன் செட்டியாரின் கெட்ட குணங்களைப் பற்றியும் அவர் மனைவியைப்பற்றியும் இழிவாகப்பேசினார்கள். நமது பிரபு ரங்கநாதன் செட்டியார் அந்தப் பெண்ணைப் படுத்திய பாடுகளைப் பற்றியும் வழிதவறிய நடத்தையைப் பற்றியும் பேசித் தீர்த்தார்கள். ரங்கநாதன் செட்டியாரைப்பற்றிப் பொது ஜனங்கள் பேசிய பேச்சுக்களிற் பெரும் பாகம் இவருக்குக் கேட்க வேண்டுமென்றே பேசப்பட்ட படியால் இவரதை யறிந்து சிறிது வருத்த முற்றார். சீதையால் தமக்கு நன்மை கிடைத்ததே யன்றித் தம்மால் அவளுக்கு ஒரு நன்மையுமுண்டாகவில்லை யென்பது உண்மைதானென்று கருதினார். ஆயினு மென்ன? அந்தப் பெண்தான் இறந்து போய்விட்டாளே! இனி யென்ன செய்கிறது?

சாதாரணமாக உலகில் இறந்துபோனவருடைய வீட்டிற்குச் சென்றவுடனேயே மனிதருடைய மனது சிறிது மாற்றமடைவது இயல்பு. இறந்தவரைப் பற்றி நினைக்கும்போது சாதாரணமாக யாவருக்கும் "இந்த மனித வாழ்வு நிலையற்றது. இது ஒரு நாளைக்கு அழிந்து போவதுதான். ஆகவே நாம் பாவ புண்ணியங்கட்குப்பயந்து நடக்கவேண்டும்" என்ற எண்ணந் தோன்றும். இதனைத்தான் மயான வைராக்கிய மென்று பெரியவர்கள் சொல்வார்கள். இந்த எண்ணம் உலகிலுள்ள எல்லாருக்கு முண்டாகிற போது நமது பிரபு ரங்கநாதன்செட்டியாருக்கு உண்டாகமாட்டாதா? அவரென்ன மனிதன்தானே? அவரும் இனி நன்றாக இருக்க வேண்டுமென்று எண்ணினார். துக்க வீடாக விருந்ததால் பதினைந்து நாட்கள் வரை தாஸி முத்தம்மாள் வீட்டை நாடவே யில்லை. இதைக் கண்டு பலர் ஆச்சரியப் பட்டனர். இரவு பகலாகத் தாஸி வீட்டில் காத்துக்கிடந்தவர் அந்தப் பக்கமே நோக்காம லிருப்பதற்குக் காரணம் "யோக்கியானமைதான்" என்று கருதி விட்டனர். மற்றுஞ் சில நாட்கள் சென்றன. ரங்கநாதர் வீட்டை விட்டு அசையவில்லை.

(தொடரும்.)



# பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின்

# மகாநாடு.

## இரங்கோனைச் சேர்ந்த திருக்கம்பையிற் கூடியது.

## ஏராளமான பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

## முக்கியமான தீர்மானங்கள் நிறைவேறின.

இரக்தாக்ஷி ௵ மார்கழி ௴ ௧௧௨ இரவே ௩௦௦ பிரதிநிதிகளுக்கு மேல் வந்து விட்டார்கள். ௧௨ காலையில் பிரதிநிதிகளும் காண வருபவர்களுமாக சுமார் அறுநூற்றுவருக் கதிகமாகக் கூடிவிட்டனர். மேலும் மேலும் அதிகப் பிரதிநிதிகளும் காணவருபவர்களும் வந்து கொண்டே யிருந்தனர். மகாநாட்டுக் கொட்டகைக்குச் செல்லும் வீதியின் நுழைவாயிலிலும், மகா நாட்டுக் கொட்டகையின் நுழைவாயிலிலும் பெரிய எழுத்துக்களில் 'பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் மகாநாடு' என்று விசித்திரமாக எழுதப்பெற்றிருந்தது. கொட்டகையினுள் அழகிய படங்கள் திகழ்ந்தன. வீரமொழிகளும், ஞானமொழிகளும், நீதிமொழிகளும், அன்புமொழிகளும் எழுதிக் கம்பங்களோறும் தொங்கவிடப் பெற்றிருந்தன. தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கத்தார் இச்சா சேவகர்களாய் வீர உடை தரித்து அணிவகுத்துத் தொண்டு புரிந்துகொண்டிருந்த காட்சி கண்டோர் மனதைக் கவரச் செய்தன. சுமார் ௨ மணிக்கு சமீபத்திலுள்ள நகரத்தார் மடத்திலிருந்து மகா நாட்டுத் தலைவர் ஸ்ரீமாந் தீ. சொ. நாகப்ப செட்டியாரவர்களும், சங்கத் தலைவர் ஸ்ரீமாந் சா. அ. ராம. சாமிநாதச் செட்டியா ரவர்களும், வரவேற்புக் கழகத் தலைவர் ஸ்ரீமாந் பெ. மு. அ. நாராயணஞ் செட்டியா ரவர்களும் சங்கக் காரியதரிசி ஸ்ரீமாந் ராம. மெ. சித. அருணாசலஞ் செட்டியாரவர்களால் புஷ்பமாலைகள் சூட்டப் பெற்று வாத்திய கோஷத்துடன் இச்சா சேவகர்கள் அணி வகுத்துச் செல்ல அன்பர் குழாம் புடைசூழ அழைத்து வரப்பெற்று 'தனவைசியர்கட்கு ஜெய்' என்ற மங்கள ஒலியோடு கொட்டகையினுட் புகுந்து மிகுந்த ஆரவாரத்துடன் நீண்ட கரகோஷத்தி னிடையே தனித் தனி அமைத்திருந்த அழகிய ஆசனங்களில் தலைவர்கள் அமர்ந்தனர். அவ்வமயம் சுமார் ஆயிரம் ஜனங்களுக்கு மேலிருந்தது குறிப்பிடத்தக்கது. மேலும் வந்து கொண்டே யிருந்தனர். தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கச் சிறுவர்களிருவர் கடவுள் வாழ்த்துப்பாடினர்.

### மகாநாட்டின் ஆரம்பம்.

பின்னர் வரவேற்புக் கழகத் தலைவர் ஸ்ரீமாந் பெ. மு. அ. நாராயணஞ் செட்டியாரவர்கள் பர்மாவின் பல பாகங்களிலிருந்தும் உள்ளூரி லிருந்தும் வந்திருந்த பிரதிநிதிகளுக்கும் ஏனையோர்களுக்கும் நல்வரவு கூறி வரவேற்புப் பிரசங்கத்தை அழகாக உபந்யசித்தார்கள்.

அதன் பின்னர் இரங்கூன் ஸ்ரீமாந் சி. ராம. சி. சதாசிவச் செட்டியாரவர்கள் இம்மகாநாட்டுக்கு ஸ்ரீமாந் தீ. சொ. நாகப்பசெட்டியா ரவர்கள் தலைமை வகிக்க மிகவும் தகுதி யுடையவர்களாதலால் அவர்களையே இம் மகாநாட்டிற்குத் தலைவராக நியமிக்க வேண்டுமெனப் பிரரேபித்தார்கள். அதனைத் திருவாளர் மாந்தனை சா. அ. ராம. இராமசாமிச் செட்டியாரவர்கள் ஆமோதிக்க திருவாளர்களான மூப்பின் ப. சு. பழ. ப பழநியப்பசெட்டியாரவர்களும், டையூ ராம. சு. ராம. இராமன் செட்டியாரவர்களும் தலைவரவர்களின் புகழையும் தொழிலாற்றுந் திறமையையும் நமது சமூக அபிமானத்தின் பெருக்கையும் மிகவும் அழகாகக் கூறி ஆதரித்தனர்.

அதன் பிறகு ஸ்ரீமாந் தீ. சொ. நாகப்பசெட்டியாரவர்கள் நீண்ட கரகோஷத்தி னிடையே எழுந்து முகவுரைப் பிரசங்கத்தை மிக இனிமையாகப் பிரசங்கித்தார்கள்.

பின்பு மகாநாட்டுத் தலைவரவர்கள் கேட்டுக்கொண்டதற் கிணங்க பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் இவ் வருஷத்திய நிரந்தர அக்ராசனர் ஸ்ரீமாந் சா. அ. ராம. சாமிநாதச் செட்டியாரவர்கள் நீண்டதோர் உபந்நியாசம் புரிந்தார்கள். அப்பால் இரங்கூனுக்கு ௨௧ நிர்வாக சபை அங்கத்தினர் போதாதெனவும் இன்னும் ஒவ்வொரு அறைக்கு ஒவ்வொரு அங்கத்தினர் அதிகமாகக் கொடுக்கவேண்டுமெனவும் தலைவரவர்களும் மற்ற யாவரும் கலந்து பேசி அவ்வாறே முடிவு செய்து அறைக்கு அறை ஒருவர் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள். இது மகாநாட்டுக்கு மட்டுமேயாகும். சங்கத்தின் நிர்வாக சபைக்கு இரங்கூனுக்கு முன்னிருந்தபடி ௨௧ மெம்பர்கள்தான் நிர்வாக சபை மெம்பர்களாவார்கள். தலைவர்கள் மூவரின் உபந்யாசங்களும் அச்சிட்டுத் தனித்தனிப் புத்தக வடிவமாக்கி அப் புத்தகங்கள் அனைவோர்க்கும் வழங்கப்பெற்றன. நான்கு மணி ஆயிற்று. சிற்றுண்டிக்காக விடுமுறை கொடுக்கப்பெற்றது.

### விஷயாலோசனைக் கூட்டம்.

மீண்டும் மாலை ௬-மணிக்கு விஷயாலோசனைக் கூட்டப் பிரதிநிதிகள் நூற்றிருபதின்மருக் கதிகமாகக் கூடியிருந்தனர். பல தீர்மானங்கள் நல்ல ருசிகரமான விவாதத்தினிடையே நிறைவேறின. இரவு ௧௦-௩௦ மணியாகவே இன்னும் பல தீர்மானங்கள் பாக்கியிருந்தன. இந்நிலையில் பாக்கித் தீர்மானங்களை மறுநாள் வைத்துக்கொள்வது நலமெனவும் இன்றையக் கூட்டத்தை முடித்துக்கொள்ள வேண்டுமெனவும் எல்லோரும் எண்ணினார்கள். அவ்வாறே கடவுள் வாழ்த்துடன் முதல் நாட் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

### இரண்டாம் நாள்.

௧௩-ந் தேதி காலை ஒன்பது மணிக்கு மீண்டும் விஷயாலோசனைக் கூட்டப் பிரதிநிதிகள் கூடினார்கள். பாக்கியுள்ள தீர்மானங்களையும் முடிவுசெய்து சில தீர்மானங்கள் அடுத்த மகாநாட்டிற்கு ஒதுக்கி வைக்கப் பெற்றன. ௧௨ மணிக்கு விஷயாலோசனைக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

### மகா நாட்டின் நடவடிக்கைகள்.

பிற்பகல் ௨ மணிக்கு மகாநாடு ஆரம்பமாயிற்று. சுமார் ஆயிரத்திருநூற்றுவருக்கு அதிகமான ஜனங்கள் கூடியிருந்தனர். தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கச் சிறுவர்கள் நால்வரால் கடவுள் வாழ்த்துக் கூறக் கூட்டம் ஆரம்பிக்கப்பெற்றது. ஸ்ரீமாந் சொ. முருகப்ப செட்டியாரவர்கள் அனுப்பிய தந்தியும் மற்றுமுள்ள தந்திகளும் கடிதங்களும் படிக்கப் பெற்றன.

### தீர்மானங்கள்.

௧.(அ) "நமது காருண்ய கவர்ன்மெண்டார் இப்பர்மா தேயத்திலும் அவர்கள் ஆளுகைக்குட்பட்ட மற்றத் தேயங்களிலும் நம்மவர்கட்கு வியாபார விஷயமாகச் செய்து வரும் பேருதவிக்கு இம்மகாநாடு தன் மனப்பூரணமான ராஜவிஸ்வாசத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறது."

(ஆ) "இப்பர்மா தேயத்தில் பர்மிய மகா ஜனங்களுக்குள் முதல்முதல் ஐகோர்ட்டு ஜட்ஜ் பதவியையும் பிறகு பர்மா கவர்ன்மெண்டின் நிர்வாக சபையில் ஹோம் மெம்பர் பதவியையும் முறையே வகித்திருந்த ஸர் மாங்கின் அவர்கள் அகால மரணமடைந்ததற்கு இம்மகாநாடு தனது அநுதாபத்தை தெரிவித்துக் கொள்ளுகிறது."

(இ) "இப்பொழுது பர்மா கவர்ன்மெண்டின் நிர்வாக சபையில் ஹோம் மெம்பர் பதவிக்கு கனம் ஊமே அவுங் அவர்களைத் தெரிந்தெடுத்திருப்பதற்கு இம் மகாநாடு தனது சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறது."

இத் தீர்மானங்களை மகாநாட்டுத் தலைவரவர்கள் பிரரேபித்தார்கள். அத்தீர்மானங்கள் ஏக மனதாக அங்கீகரிக்கப் பெற்றன.

௨. "தைப்பூசத்திற்கு இரண்டு நாட்களாவது அல்லது ஒரு நாளாவது கோர்ட்டு, பேங்கு முதலியவற்றிற்கு விடுமுறைநாள் (பப்ளிக் ஆலிடே) எனச் செய்ய வேண்டுமென் இம் மகாநாடு கவர்ன்மெண்டாரைக் கேட்டுக்கொள்ளுகிறது" என்ற தீர்மானத்தை இரங்கூன் திருவாளர் அள. அரு. சுப்பிரமணியஞ் செட்டியார் அவர்கள் பிரரேபித்து, "மேது நாட்டில் மற்ற விசேஷ நாட்களைக் கொண்டாடுவது போல் இக்

நாட்டில் ஒவ்வொரு தமிழ் வகுப்பாரும் தைப் பூசத்தையே விசேஷ நாட்களாகக் கொண்டாடுவதால் இதற்கு இரண்டு நாட்களேனும் அல்லது தைப்பூசத்தன்று ஒரு நாளேனும் விடு முறை நாளாக கவர்ண்மெண்டார் கொடுக்க வேண்டியது மிகவும் அவசியமாகு மெனவும் பேசினார்கள். அதனைத் திருவாளர்களான இரங்கூன் அரு. அரு சோம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் ஆமோதிக்க மோல்மேன் அழ. மு. ராம பழநியப்ப செட்டியாரவர்கள் ஆதரிக்கத் தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

ரு. "நம்மவர்கள் பேரில் கிரிமினல் கேஸ் ஏற்பட்டால் முடிவான அப்பீலில் குற்றவாளியென்று தீர்மானிக்கும் வரை அவர்களுக்கு விலங்கு தரித்தல் கூடாதென இம்மகாநாடு கவர்ண்மெண்டாரைக் கேட்டுக் கொள்கிறது." என்ற தீர்மானத்தை மோபி திருவாளர் அழ. மு. வீரப்ப செட்டியாரவர்கள் பிரரேபித்து இத்தீர்மானம் நமக்கு மிகவும் இன்றியமையாத தீர்மானமாகுமென்றும் நாம் தொழிலின் முறையில் வீடுபெட்டிருப்பவர்களாதலாலும் மிகவும் தாட்சண்யமும் நம்பிக்கையுமுடையவர்களாதலாலும் பிறர் நம்மை எப்படியாவது ஏமாற்றிப் போலீஸ் கே. சென்றால் ஜாதிக்கட்டுப்பாட்டை நோக்கிப் பயப்பட வேண்டியதாகவே நேருகிறதென்றும் இவ்விஷயத்தைத் தெரிந்து கொண்டே பலர் பணம் பறிக்க ஆரம்பித்து விடுகின்றன ரென்றும் ஆகவே இவ் வேண்டுகோளைக் கவர்ண்மெண்டார் அங்கீகரித்து உத்திரவு செய்வார்களென்றே நம்புகிறேனெனவும் பேசினார்கள். அதனை திருவாளர்களான போக்கலே ப. வ. அருணசலஞ் செட்டியாரவர்கள் ஆமோதிக்க மோல்மென்குன் ந மு.சொ. ராம. கருப்பன் செட்டியார் அவர்களும் இரங்கூன் பி கு. நா. சோமசுந்தரஞ் செட்டியார்வர்களும் ஆதரிக்கத் தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

சு. "நம்தாய் நாட்டில்இரண்டாயிரம் வாலிபர்கள் கல்யாணத்திற்கு வகையின்றித் தவிக்கின்றார்கள்.வீண் செலவு கணக்கின்றி ஏறிக்கொண்டே போகிறது. இவைகளுக்கு வழி பிறப்பதற்காகத்தொண்ணூற்றுநூர்க் கூட்டத்தைப் புதிய முறையில் மறுபடியும் கூட்டி அவைகளுக்கு வேண்டுவன செய்ய வேண்டுமென நமது நாட்டிலுள்ள தலைவர்களையும் மற்றுமுள்ள அன்பர்களையும் தனவைசிய ஊழியர் சங்கத்தாரையும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது" என்ற தீர்மானத்தை இரங்கூன் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கச் சார்பில் பிரரேபித்த திருவாளர் வெ. கண. வெ. சொக்கலிங்கஐயா அவர்கள், தொண்ணூற்றுநூர்க் கூட்டம் மூன்று ஆண்டுகட்கு முன்னர் கோவிலூரிற் கூடிப் பல நன்மைபயக்கும் தீர்மானங்களைச் செய்தது. அதன்படி சில காலம் நடந்து வந்ததால் நமது சமூகத்தார் செட்டியார் என்ற பேருக்கேற்பச் செட்டான் முறையிற் சந்தோஷத்துடன் வாழ்க்கையை நடாத்தி வந்தார்களென்பதை யாவரும் ஒப்புக்கொள்வீர்கள். ஓராண்டிற்குள் அக்கூட்டம் மாறுபாடடைந்ததால் பெண்விலை கணக்கின்றி, வரம்பின்றி, காளையர் கிழவரென்ற பேதமின்றி விஷம்போல் கண்டமட்டும் ஏறிவிட்டது. அதனால் ஆயிரக்கணக்கான வாலிபர்கள் விவாகமின்றி மனைவியரை மணக்குங்காலத்தை எதிர் நோக்கி யேங்கி நிற்கின்றனர், இவருள் மறு ஜாதி மாதர்களை மணமியற்றி மனக்கிலேசமின்றி வாழலாமென எண்ணுவார் பலர். ஆயிரக்கணக்கான பெருந்தொகைகளிருந்தும் பெண் வீட்டுக்காரர்களின் பெருந்தனஆசை காரணமாக அத்தனையும் போதாமல் கடன்வாங்கி நமது ஜாதிப் பெண்ணைக் கொண்டு கடன்காரருக்குக் கைசட்டுவதோடு கல்வி யறிவைக் கனவிலு மறியா விக்கன்னியர்களுடன் வாழ்ந்து கஷ்டமடைவதைக் காட்டிலும் இச்சை மாதர் பால் நண்ணி இன்புற்றிருத்தல் நலமென எண்ணுவர் பலர். அன்பர்களே நமது தர்ம குலத்திலுதித்த வாலிபர்கள் இப்படி எண்ணுங் காலமுமா வந்தது? இதற்கெல்லாம் காரணம் உபயோகமற்ற சாமான்களை உயர்ந்த விலை கொடுத்து அனாவசியமாய் அளவின்றி வாங்கிவைத்தலாகிய வீண் செலவாலன்றோ பெண்ணிற்குப் பெருந்தொகை ஏறிவிட்டது. விசேஷ காலங்களில் அகாரணமாய் பெட்டியென்றும், சட்டியென்றும் பலகாரமென்றும் பணங்களை வாரி இறைக்கின்றனர். இவ்வீண் செலவிற்கும் பெண்விலையேற்றத்திற்கும் நாசமேற்படுவதற்கு தொண்ணூற்றுநூர்க் கூட்டம் மறுமுறையும் கூடுவது அவசியமாகும். அக்கூட்டத்தைப்பற்றி இங்கு தீர்மானிக்க வேண்டுவதவசியமாவென்று யோஜிக்கு மிடத்து, நம்மவரிற் பெரும்பாலோர் வெளி நாடுகளிலேயே வருடக் கணக்காகத் தங்கி யிருக்கின்றனர். நமது நாட்டிலுள்ளவர்களிற் றனவந்தர்களும் வயோதிகர்களும் சிறு குழந்தைகளுமே மிகுந்திருக்கின்றனர். தனவந்தர்கட்கோ பெரும் பணத்தோடு பெண் வந்து குவிவதால் பெண் விலை யேற்றத்தைப் பற்றியும் வீண் செலவுகளைப்பற்றியும் கவலையேயில்லை. விருத்தர்களுக்கோ, கவனிக்க எண்ண மிருக்கிறது; சரீரம் இடந்தரவில்லை. சிறு குழந்தைகளைப் பற்றி ஒன்றுஞ் சொல்வதற்கில்லை. இந்நிலையில் வெளிநாடுகளுக்கு வந்திருக்கும் நாம்தான் தீர்மானித்து நமது நாட்டிலுள்ள தலைவர்களைத் தொண்ணூற்றுநூர்க் கூட்டத்தைக் கூட்டி நன்மை பயக்கும் தீர்மானங்களைச் செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளல் வேண்டும். இத்தீர்மானமானது விவாகமாகாத ஆயிரக்கணக்கான வாலிபர்கள் விவாகத்தை முடித்துச் சந்தோஷத்துடன் இல்லற வாழ்வை நடாத்தக் கூடியது; நமது குல ஆண் பெண் இருபாலோரும் மனங்களித்தின்புறச் செய்வது; நம் வாழ்நாளெல்லாம் அன்னிய நாட்டிற் கழிப்பதைத்தடுத்து மனைவி மக்களோடின்புறச் செய்வது; நாம் அரும்பாடுபட்டுச் சம்பாதித்த பொருளை வீண் செலவாக்காமற் சன்மார்க்க நெறியிற் செலுத்துவது; நமது விடபுருடர்விலை மாதரோடிணங்காது உரிய மனைவியரோடுக் களிக்கச் செய்வது; நமது சிறுவர்களைக் கல்வியின்றிக் கப்பலேறுவதைச் சீர்திருத்தி விற்பன்னர்களாகச் செய்வது; நமதுகுல மணமியற்றப் பெறாத பெண்கள் நாயகன் எப்பொழுது வருவாரென ஏங்கி யிருப்பதை நீக்கி இணைபிரியாத வின்பத்திற் களிக்கச் செய்வது" என மிக ஊக்கத்தோடு பேசினார்கள். அதனை தோங்குவா திருவாளர் அள. சுப. பழ. பழனியப்ப செட்டியா ரவர்கள் ஆமோதிக்க, டையூ திருவாளர் ராம. சு. ராம. ராமன் செட்டியாரவர்கள் "தொண்ணூற்றுநூர்க் கூட்டம் சிறந்த தீர்மானங்களைச் செய்திருந்தது. அதில் முக்கியமானது பெண் வீட்டார் செலவிற்குப் பணம் வாங்கும் தொகையை பதினாயிர மெனச் செய்திருந்தால் தீர்மானங்கள் வழுவவே மாட்டா. இனி தொண்ணூற்றுநூர்க் கூட்டத்தை நமது நாட்டிலுள்ள தலைவர்களும் ஏனையோர்களும் ஊழியர் சங்கத்தாருமாகக் கூட்டி நமது சமூகத்திலுள்ள வீண் செலவு சீர் முறைச் செலவுகளை நீக்கி வாலிபர்களுக்குச்சுலபமாகப் பெண் கிடைக்கும்படியான தீர்மானங்களைச் செய்யும்படி கேட்டுக் கொண்ட தீர்மானம் மிகஅவசியமான" தென்று ஆதரித்தார்கள். அதன் பின்னர் இரங்கூன் திருவாளர் அ. ப. சொ. சோமசுந்திரஞ்செட்டியாரவர்கள் "தொண்ணூற்றுநூர்க் கூட்டத்தை மறு முறையும் கூட்டும் பொருட்டு திருவாளர் வெ. கண. வெ. சொக்கலிங்க ஐயா அவர்கள் கொண்டு வந்த தீமான்த்தை ஆதரிப்பதற்காக உங்கள் முன் வந்து நிற்கின்றேன். நமது சமூகத்தை பெண் விலையும் வீண் செலவுமே முன்னேற விடாது தடுத்துக் கொண்டிருக்கின்றன. நாம் எவ்வளவு செல்வவந்தர்களாயிருந்தாலும் இன்னும் பத்து பதினைந்து வருடங்களுக்கு மேல் தலைமைப் பதவியை ஏற்று நடத்த வேண்டியவர்கள் இப்பொழுது இளைஞர்களாயிருப்பவர்களே. இவர்கள் இப்பொழுதிருந்தே வீண் செலவாலும் பெண் அகப்படாததினாலும் வருந்துவார்களேயானால் பிற்காலத்தில் உற்சாக மில்லாதவர்களா யிருப்பதோடு சமூகத்தின் கௌரவமும் குறைந்துவிடுமோவென ஐயுறுகின்றேன். பெரியோர்களே! மற்ற பல தருமங்களைக் காட்டிலும் இது பெரிய தருமமெனக் கருதுங்கள். நமது சமூகத்தில் இரண்டாயிரம் வாலிபர்கள் பெண் அகப்படாது தவிக்கின்றனர். அவர்களுக்கு வழி பிறக்கவேண்டியது மிகவும் அவசியம். இவ்வமயம் தொண்ணூற்றுநூர்க் கூட்டம் கூட்டுவதற்கு பலர் முயற்சிப்பதாக அறிகிறேன். இவ்வமயம் நாமும்இத்தகைய சிறந்த தீர்மானத்தைச் செய்து அனுப்புவோமானால் பலனளிக்குமெனக் கருதி என் முழு மனதோடு இதை ஆதரிக்கின்றேன்" என மிக உருக்கத்தோடு பேசினார்கள்.

அதன் பின்னர் லேப்படான் திருவாளர் அ. வீர. அ.சு. சாமிநாதன்செட்டியாரவர்கள் "உங்கள் முன்னிலையிலிருக்கும் தீர்மானம் தொண்ணூற்றுநூர்க் கூட்டத்தைப் பற்றிய தீர்மானமாகும். இத்தீர்மானத்தை ஆதரிக்கவே உங்கள் முன் எழுந்து நிற்கின்றேன். எனக்கு முன் பல அன்பர்கள் சாற்றைப் பிழிந்துவிட்டார்கள்; சக்கைதானிருக்கிறது. என்றாலும் யானும் பிழிந்து பார்க்கிறேன். பன்னிரண்டு ரூபாய் சம்பளம் வாங்கும் ஒரு வண்டிக்காரன் மனைவியுடனின்ப மனுபவிக்கிறான். அவன் குடியிருக்கிற வீட்டினுள்ளிருக்கும் செட்டியாருக்கு மூப்பத்தையாயிரம் ரூபாய்களிருக்கின்றன. அவருக்கு மனைவியேகிடையாது. சனியன் தொலைந்ததென்றிருப்போமென்றால், மிகவும் சுருங்கியவருவாயுடையவன்மனைவியுடனின்பமனுபவிப்பதைப் பார்க்க நோகிறது. சுலபமாக வேறு வழியிற் பார்ப்போமென்றால் சமூகக் கட்டுப்பாடு தொங்கிக்கொண்டிருப்பது தலையிலிடிந்து விழுந்து விடும்போலிருக்கிறது. கேவலம் மிருகங்கள் கூட அனுபவிக்கும் இச்சுகத்தை ஆறறிவுள்ள மக்கட் பிறவியிலும் ஒப்புயர்வற்ற உங்கள் தர்ம சமூகத்திற் பிறந்த வாலிபர்கள் அனுபவிக்காம லிருப்பதைப் பார்த்துக்கொண்டிருக்க உங்கள் மனம் சம்மதிக்கிறதா? ஒரு சுகம் வேண்டாமா? இத்தர்ம சமூகத்திற் பிறந்ததற்கு இதுதானா பலன்? நமது சங்க அக்ராசனரவர்கள் கூறியிருப்பதுபோல் பணக்காரர்கள் பணக்காரர்களையே நாடுகின்றனர். சிறிது பணமுள்ளாரும் அப் பணக்காரர்களையே நாடுகின்றனர். இவர்கள் ஒரு வழியாக விருக்கட்டும். நமக்குக் கீழிருப்போர் வீட்டுப் பெண்களைப் பார்ப்போமென்று சென்றால், அங்கு மூன்றாந் தாரத்திற்கு மோட்டார்கார்கள் வந்து நிற்கின்றன. அன்பர்களே! இந்நிலையிற் பணக்காரர்கள்தான் கருணைகாட்ட வேண்டும். வீண்செலவும் சீர்முறைச் செலவும் ஒழியுமானால் பெண்ணிற்கு அவர்களே பணம் வாங்கமாட்டார்கள். வாங்கவேண்டிய அவசியமும் நேராது. வீண்செலவையும் சீர் முறையையும் கட்டுப்படுத்தினால் ஒரு கல்யாணத்திற்கு குறைந்தது ரூபாய் மூவாயிரம் மிஞ்சும். ஒருவருடத்திற்கு நூறு கலியாணமேனும் நடக்கத்தான் செய்யும். அப்படியானால் மூன்று லெட்ச ரூபாய்கள் மிஞ்சவில்லையா? இந்தச் சம்பாத்தியம் போதாதா? நமது மகாநாட்டு அக்ராசனரவர்கள் நமது சமூக மகாநாடு கூடி எழுபது வருடங்களாகின்றவெனவும் நமது வரவேற்புக் கழகத் தலைவர்கள் நாம் இப்பர்மா நாட்டிற்கு வந்து எழுபது வருடங்களாகின்றன வெனவும் கூறுவதை நோக்கும்பொழுது இப் பர்மா தேயத்திற்கு வந்தவுடன் மகாநாடு கூடுவதும் நின்றுவிட்டது எனலாம். காரணம் வேகமுள்ள எல்லோரும் இங்கு வந்து விட்டார்களாதலாற்றான் தொண்ணூற்றுநூர்க் கூட்டம் நின்று விட்டதென எண்ண இடந்தருகிறது. இந்நிலையில் நமது நாட்டில் தலைவர்கள்தான் வேலை செய்ய வேண்டியதாய் வந்து நேர்ந்திருக்கிறது. பெண் சுலபமாகக் கிடைக்க வேண்டுமென்றால் வீண் செலவும் சீர் முறைச்செலவும் சுருங்க வேண்டும். அச் செலவுகள் சுருங்குவதற்கு நமது நாட்டில் மகாநாடு கூட்டித்தீர்மானங்களை யாரும் இம்மியும் மீற முடியாதபடி சரியான வழிகளைக் கண்டு பிடித்துத்தகுதியான தீர்மானங்களைச் செய்ய வேண்டுவது மிகவும் முக்கியமாகு" மென மிக ஊக்கமாகப் பேசி அத்தீர்மானத்தை யாதரித்தார்கள். தீர்மானம் குதூகலமாக நீண்ட கரகோஷத்தினிடையே நிறைவேறியது.

ஓ. "நமது சமூக நன்மையையும் தொழில் அபிவிருத்தியையும் கருதி இரங்கோனில் ஸ்தாபித்துள்ள பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் சங்கத்திற்கு வருட சந்தா ரூபாய் பன்னிரண்டும் முந்திய சந்தா பாக்கி யிருந்தால் அதையும் ஒவ்வொரு ஊரிலும் மகமைத் தொகையுடன் சந்தாத் தொகையையும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் எல்லாக் கடைகளிலும் வசூலித்து அவ்வவ்வூர் நகரத்தார்கள் காரியதரிசிக்கு அனுப்பித் தருகிறது. மகமை எழுதாத ஊர்களிலுள்ள நகரத்தார்கள் இப் பங்குனி மாதத்திற்குள் அனுப்பித் தருகிறது. மேற்கண்டபடி நடந்து கொள்வதற்கு எந்த ஊராவது எந்தக் கடைக்காராவது மறுதளித்தால் நமது சங்கத்திற்குத் தெரிவித்து நமது முறைப்படி ஒவ்வொருவரும் நடந்து கொள்ளுகிறது" என்ற தீர்மானத்தை இரங்கூன் திருவாளர் ராம. மெ. சித. அருணசலஞ் செட்டியாரவர்கள் பிரரேபித்து சுருக்கமாக விளக்கிக் காட்டினார்கள். அதனைத் தோங்குவா திருவாளர் அழ. சுப. பழ. பழநியப்ப செட்டியாரவர்கள் ஆமோதிக்க திருவாளர்களான மோபி அழ. மு. வீரப்ப செட்டியாரவர்களும் பியூ வெ. ராம. அழ. கருப்பன் செட்டியாரவர்களும் மாந்தலே சொ. தீ. ராமன் செட்டியாரவர்களும் லெப்டான் அ. வீர. அ. சு. சாமிநாதஞ் செட்டியாரவர்களும் ஆதரிக்கத்தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

சு. "நமது சங்கமாதாமாதத்திய நிர்வாக சபைக் கூட்டத்திற்கு இப்பொழுது மகாநாட்டிற்கு வந்திருக்கும் விஷயாலோசனைக் கூட்ட மெம்பர்கள் ஒவ்வொருவரும் பிரதிநிதியாவார்களென இம்மகாநாடுதீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை மோபி திருவாளர் அழ. மு. வீரப்ப செட்டியாரவர்கள் பிரரேபித்துச் சுருக்கமாக சில வார்த்தைகள் சொன்னார்கள். அத்தீர்மானத்தில் லெப்படான் திருவாளர் அ. வீர.அ. சு. சாமிநாதன் செட்டியாரவர்கள்சிலதிருத்தம்கொண்டு வந்தார்கள். அத்திருத்தத்தைத்தீர்மானங்கொண்டு வந்த திருவாளர் அழ. மு. வீரப்ப செட்டியாரவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். அத்திருத்தத்தோடுள்ள தீர்மானம் அடியில் வருமாறு: "நமது சங்கம் மாதா மாதத்திய நிர்வாக சபைக் கூட்டத்திற்கு கடைகளும் அதற்கு மேலுள்ள கடைகளுமுள்ள ஒவ்வொரு ஊராரும் ஒவ்வொரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்தனுப்ப வேண்டுமென்றும், தொடர்ச்சியாக மூன்று கூட்டங்களுக்கு வராத அங்கத்தினர்கள் அந்தஸ்தானத்தி லிருந்தும் நீக்கப் பெறுவார்களென்றும் பிறகு அடுத்த வருடந்தான் பதில் மெம்பர் தேர்ந்தெடுத்து அதன்விபரத்தைச் சங்கத்தாருக்குத் தெரிவித்த ஊராருக்குத்தான் நிர்வாக சபைமெம்பர் ஸ்தானம் உண்டென்றும் நமது அங்கத்தினர்களுள்ள ஒவ்வொரு ஊருக்கும் மாதாமாதத்திய நிர்வாக சபைத் தீர்மானங்களை அனுப்ப வேண்டு மெனவும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை லெப்டான் அ. வீர. அசு. சாமிநாதன் செட்டியாரவர்கள் வாசித்தார்கள். அதனை மாந்தலே திருவாளர் சொ. தீ. இராமன் செட்டியாரவர்கள் ஆமோதிக்க திருவாளர்களான பாசீன் அ. மு. நா. முத்துக்கருப்பன் செட்டியாரவர்களும் இரங்கூன் மெ. அரு. அரு. சோமசுந்தரஞ் செட்டியாரவர்களும் ஆதரிக்கத் தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

எ. "இப்பர்மாவிலுள்ளநம்மவர்களின் கடைக்காரர்கள் ஒருவருக்கொருவர் வட்டத்திற்குக் கொடுத்து வாங்கிக்கொள்ளுகிற தில்லை. நடப்பு வட்டி, தவணை வட்டிக்கு மேல் வெயன் வட்டி பேசிக் கொடுத்து வாங்கிக் கொள்கிறது. நம்மவர்கள் வங்கிக்காரர்களல்லாத மற்றயாரிடத்திலும் உட் கையெழுத்து டிஸ்கவுண்டு உண்டியல் எழுதுவதில்லையென இம்மகாநாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தைஇரங்கூன் திருவாளர் பெ. மு. அ. நாராயணன் செட்டியாரவர்கள் பிரரேபித்தார்கள். அதனை ஈந்தட்டா திருவாளர் பெ. மு. அ. இலக்குமணச் செட்டியாரவர்கள் ஆமோதிக்கதிருவாளர்களானடையூ ராம. சு.ராம.ராமன்செட்டியாரவர்களும்மோல்மேன் அ.மு.மு.ராம.பழநியப்பசெட்டியாரவர்களும் ஆதரிக்கத் தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

அ. "நம்மவர்களுக்கு கப்பல் ரயில்பிரயாண காலங்களில் ஏற்படும் அசௌகரியங்களை அதனதன் மேலதிகாரிகளுக்கு நமது சங்கக் காரியதரிசி தெரிவித்து வேண்டுவன செய்ய வேண்டுமாய் இம்மகாநாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை போக்கலே திருவாளர் அ. கு. ச. இலக்குமணச் செட்டியாரவர்கள் சிறிது விளக்கமாகக் கூறிப் பிரரேபித்தார்கள். அதனை மீன்லா திருவாளர் பழ. சுப.பழ. காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்கள் ஆமோதிக்கத் தீர்மானம்ஏகமனதாய்நிறைவேறியது.

கூ. "நமது வியாபார முன்னேற்றத்திற்காக பர்மா சட்ட சபையிலும் இரங்கூன் கார்போரேஷனிலும் மற்ற ஊர்களில் முனிசிபால்டிகளிலும் நம்மவர்களுக்குஸ்தானம் கொடுக்கவேண்டுமென்று கவர்ன்மெண்டாரைக் கேட்டுக் கொள்வதோடு எலக்ஷனிலும் நம்மவர்கள் முன்னின்று ஒவ்வொரு ஸ்தானத்தையும் பெற முயற்சிக்க வேண்டுமெனவும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை இரங்கூன் திருவாளர் அ. ப. சொ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் நீண்டு பேசி பிரரேபித்தார்கள். அதனைத் திருவாளர்களான இரங்கூன் சொ. மு. அரு. அழகப்ப செட்டியாரவர்களும் வெ. கண. வெ. சொக்கலிங்க ஐயா அவர்களும் ஆதரித்தார்கள். அதன் பின்னர் அத்தீர்மானத்தை யாதரித்த தோஞ்சை திருவாளர் சுப. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் 'சென்னை மாகாண சட்டசபையில் நம்மவர்களுக்கென்று ஸ்திரமாக ஸ்தானம் ஒதுக்கி வைக்கப் பெற்றிருக்கிறது. அந்த ஸ்தானத்தில் இப்பொழுது கனம் முருகப்பச் செட்டியார் அவர்களிருந்துவருகிறார்கள். அதுபோல நமக்கு இங்கு ஸ்தானம் பெற வேண்டியது

முக்கிய மென்றும் மற்ற ஒவ்வொரு ஸ்தானத்தையும் நாம் பெற முயற்சிக்க வேண்டு மென்றும் கூறினார்கள். தீர்மானம் ஏக மனதாய் நிறைவேறியது.

க0. "இரங்கோனில் நம்மவரால் ஏற்படுத்தப் பெற்றிருக்கும் பாடசாலையை உன்னத ஸ்திதிக்குக் கொண்டு வருவதற்காவன செய்ய வேண்டுமென இம் மகாநாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை இரங்கூன் திருவாளர் வெ. சுண. வெ. சொக்கலிங்க ஐயா அவர்கள் சுருங்கச் சொல்லி விளக்கிக் காட்டிப் பிரரேபித்தார்கள். அதனை இரங்கூன் திருவாளர் வயி. ராம. நா. வெங்கடாசலஞ் செட்டியாரவர்கள் ஆமோதிக்கத் தீர்மானம் ஏக மனதாய் நிறைவேறியது.

கக. "நம்மவர்களிடம் ரிஜிஸ்தர் மார்ட்கேஜ் வைத்திருக்கும் ஆசாமிகள் வரிச்செலுத்தாதிருந்து கவர்ண்மெண்டார் ஏலம் போடும்படி நேர்ந்தால் மார்ட்கேஜ்காரருக்குத் தெரிவித்த பிற்பாடுதான் ஏலம் போட வேண்டுமென கவர்ண்மெண்டாரை இம்மகாநாடு கேட்டுக் கொள்ளுகிறது" என்ற தீர்மானத்தை பக்கோ திருவாளர் ராம. சு. லெ. ராம. லெக்ஷ்மணன் செட்டியார் அவர்கள் பிரரேபித்து இம்மாதிரி சந்தர்ப்பங்களில் மார்ட்கேஜ் பிடித்தவர்களுக்கு பெருத்த நஷ்டம் ஏற்பட்டிருக்கிறதென்றும், நம் வகுப்பார் மிகுதியாக மார்ட்கேஜ் பிடிப்பவர்களாதலால் நாம் இதிற் கவனம் செலுத்த வேண்டியது மிகவும் முக்கிய மாகிறதென்றும், சமீபத்தில் பக்கோவில் இம்மாதிரி சம்பவத்தில் பெருத்த நஷ்டம் ஏற்பட்டிருக்கிறதென்றும் ஆகவே கவர்ண்மெண்டார் மார்ட்கேஜ் பிடித்தவர்க்கு தெரிவித்த பின்னரே ஏலம் போட ஏற்பாடு செய்வார்களென நம்புகிறேன் என்றும் பேசினார்கள். அதனை டையூ திருவாளர் ராம. சு. ராம. ராமன் செட்டியாரவர்கள் நீண்டு பேசி ஆமோதிக்க லெப்படான் ஸ்ரீமாந் அ. வீர. அ. சு. சாமிநாதஞ் செட்டியாரவர்கள் ஆதரிக்கத் தீர்மானம் ஏக மனதாய் நிறைவேறியது.

கஉ. "பர்மாவிலுள்ள நம்மவர்களில் ஒவ்வொரு கடைக்காரரும் பார்ட்னராயுள்ளவர்கள் தாங்கள் பாகஸ்தர்களென்பதையும் பார்ட்னரல்லாதவர்கள் தங்கள் தங்கள் பவரையும் நமது சங்கத்தில் பதிந்து கொள்ள வேண்டு மெனவும் இத்தீர்மானம் குரோதனஞூ சித்திரை மீ முதல் அமுலுக்கு வருமெனவும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை இரங்கூன் திருவாளர் சா. அ. ராம. சாமிநாதன் செட்டியாரவர்கள் பிரரேபித்தார்கள். அதனைத் திருவாளர் அ. ப. சொ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் ஆமோதிக்க, டையூ திருவாளர் ராம. சு. ராம. ராமன் செட்டியாரவர்கள் அடிக்கடி பவரைக்கொண்டு வருவதும் திருடர்களுக்குப் பயமாயிருப்பதால் பவரை நமது சங்கத்திற் பதிவதினால் கெடுதலில்லையே என்றும் கூறித் தீர்மானத்தை ஆதரிக்கத் தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

கங. "ஏலவிளம்பரங்கள், டெண்டர் விளம்பரங்கள், தபாற் போக்கு வரத்து நேரங்கள், ஐராவதி ஆற்றிற் போக்குவரத்தாகும் கப்பல்களின் மணி நேரங்கள், முனிசிபல் விளம்பரங்கள், மராமத்திலாகா விளம்பரங்கள் இவைகளை ஆங்கிலப் பத்திரிகைகளுக்குத் தெரிவிப்பது போலத் தமிழ்ப் பத்திரிகைகளுக்கும் தெரிவிக்க வேண்டுமென இம் மகாநாடு கவர்ண்மெண்டாரைக் கேட்டுக் கொள்ளுகிறது" என்ற தீர்மானத்தை மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீமாந் தீ. சொ. நாகப்ப செட்டியாரவர்கள் பிரரேபித்தார்கள். அத்தீர்மானம் யாவராலும் ஏக மனதாய் அங்கீகரிக்கப் பெற்றது.

கச. "சென்டிரல் போர்ட் ஆப் ரெவின்யூ மெம்பராகிய கனம் வி. எப். டாட்டன்ஹாம் என்பவர் இப்பர்மாவிற்கு விஜயம் செய்யும்பொழுது அவரை இன்கம்டாக்ஸ் விஷயமாக நம்மவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் குறைகளை நிவர்த்திக்குமாறு நமது சங்கத்தின் பிரதிநிதிகளை அனுப்பி கண்டு பேசவேண்டுமென இம்மகாநாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை மோல்மேன் திருவாளர் அ. மு. மு. ராம. பழனியப்ப செட்டியாரவர்கள் பிரரேபித்தார்கள். அதனை பக்கோ ஸ்ரீமாந் ராம. சு. லெ. ராம. லெக்ஷ்மணன் செட்டியாரவர்கள் ஆமோதிக்க, பாசின் ஸ்ரீமாந் அ. மு. நா. முத்துக்கருப்பன் செட்டியாரவர்கள் ஆதரிக்கத் தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

கரு. "பர்மாவில்நம்மவர்க்கென நாட்டுக்கோட்டைச் செட்டியார் பேங்க் என்ற பெயருடன் ஒரு பேங்க் ஸ்தாபிக்க வேண்டு மெனவும் அதனை நிர்வகிப்பவர்கள் நம்மவர்களாகவே யிருக்க வேண்டுமெனவும் ஷேர்கள் நம்மவர்களே பெறல் வேண்டு மெனவும்நடத்தும் முறை மேனாட்டு முறையையும்நமதுதொழிலின் முறைகளையும் அநுசரித்ததாயிருத்தல் வேண்டுமெனவும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை இரங்கூன் ஸ்ரீமாந் பெ. மு. அ. நாராயணன் செட்டியாரவர்கள் பிரரேபித்தார்கள். அதனை இரங்கூன் ஸ்ரீமாந் அ. க. அ. சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்கள் ஆமோதிக்க, இரங்கூன் ஸ்ரீமாந் வயி. ராம. நா. வெங்கடாசலஞ் செட்டியாரவர்கள் ஆதரிக்கத் தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

கசா. "இவ்வருடம்போல் அடுத்த வருடம் (பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார்களின்) மகாநாடு இரங்கூனிலேயே கூட்ட வேண்டு மென்றும், அம்மகாநாட்டின் விஷயாலோசனைக் கமிட்டிப் பிரதிநிதிகளுக்கு அவ்வைந்து ரூபாய்களும் அங்கத்தினர்களுக்கு இரண்டிரண்டு ரூபாய்களும் காண்பவர்களுக்கு ஒவ்வொரு ரூபாயும் கட்டணம் ஏற்படுத்த வேண்டு மென்றும் விஷயாலோசனைக் கூட்டப் பிரதிநிதிகள் வாராதிருந்தால் அவர்களுக்கும் அவ்வவ்வூரார் கட்டணத்தைக் கொடுக்க வேண்டு மென்றும் மற்றவர்கள் வந்தவர்களுக்குத்தான் கட்டணம் என்றும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை டையூ திருவாளர் ராம. சு. ராம. ராமன் செட்டியார் அவர்கள் பிரரேபித்தார்கள். அதனை மோல்மேன் திருவாளர் வயி. ராம. வெ. முத்துவீரப்ப செட்டியாரவர்கள் ஆமோதிக்க திருவாளர்களான மாந்தலே ராம. சுப. நா. முத்துக்கறுப்பன்செட்டியா ரவர்களும் பாசின் அ. மு. நா. முத்துக்கறுப்பன் செட்டியா ரவர்களும் ஆதரிக்கத் தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

கஎ. "நம்மவர்களுக்குமதராஸ் வங்கிகளில் கல்கத்தா வங்கி வட்டிக்குமேல் ஒரு வட்டி போடுகிறார்கள். இரங்கூன் வங்கிக்காரர்கள் இரண்டு வட்டிபோட்டதிலிருந்தும் இப்பொழுது சமயோசிதமாக வட்டி விகிதத்தை ஏற்றிக்கொண்டு வருகிறார்க ளாதலால் மதராஸ் வட்டி போடா விட்டாலும் கல்கத்தா வட்டிக்கு மேல் இரண்டு வட்டியே போட வேண்டுமென வங்கிக்காரர்களை இம்மகாநாடு கேட்டுக்கொள்ளுகிறது." என்ற தீர்மானத்தை இரங்கூன் திருவாளர் சொ. மு. அரு. அழகப்ப செட்டியாரவர்கள்பிரரேபித்தார்கள். அதனை இரங்கூன் திருவாளர் ராம. ப. வ. மு. பெரியண்ணன் செட்டியா ரவர்கள் ஆமோதிக்க திருவாளர்களான இரங்கூன் அ. க. ராம. மெ. சித. இராமநாதன் செட்டியா ரவர்களும், மோல்மேன் சொ. மு. அரு. ராம. வெங்கடாசலஞ் செட்டியாரவர்களும் ஆதரிக்கத் தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

கஅ. "திருவாளர் சு. பழனிப்பா அவர்கள் பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் அசோசியேஷனுக்காக முன் வசூல் செய்து இப்பொழுது இரங்கூன் நகரத்தார்களிட மிருக்கும் தொகையை நமது சங்கத்திற்கு கட்டிடம் வாங்குவதற்காகச் சேர்த்து விடுவதென இம்மகாநாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை பக்கோ திருவாளர் ராம. சு. லெ. ராம. இலக்குமணச் செட்டியாரவர்கள் பிரரேபித்தார்கள். அதனை உவாக்குமா திருவாளர் தெ. நா. கருப்பஞ் செட்டியா ரவர்கள் ஆமோதிக்க ஈந்தட்டா திருவாளர் பெ. மு. அ. இலக்குமணச் செட்டியாரவர்கள் ஆதரிக்கத் தீர்மானம் ஏகமனதாய் நிறைவேறியது.

(இன்னும் வரும்;)

---



## அறிவிப்பு.

கானாடுகாத்தானிலிருக்கும் வயி. அரு. அருணாசலம் செட்டியாராகிய நான் இதன் மூலம் சகலருக்கும் தெரிவிப்பதியாதெனில்,

என்னுடைய இரண்டாவது குமாரன் வயி. அரு. அரு. சோமசுந்தரஞ்செட்டியார் என்ற அருணசலம் செட்டியாரென்பவன் குடும்பத்தில் ஒத்துமையில்லாமல் தனிமையாக வியாபாரம் செய்வதைப்பொருத்து யென்னுடைய பாகத்துக்கும் யென்னுடைய மூத்த குமாரன் வயி. அரு. வயிரவன் பாகத்துக்கும் சேர்த்து எங்களிருவருக்கும் ஷை அருணாசலத்துக்கும் வேண்டியவர்களான பஞ்சாயத்தார் தீர்த்து விட்ட பிரகாரம் எங்கள் பொது குடும்பத்துக்கு சொந்தமான ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் அனைத்தும் நானும் என் மூத்த குமாரனும் ஒப்புக்கொண்டு ஷை சொத்துக்களில் யாதொரு விதமான பின் தொடர்பின்றி ஷை அருணாசலத்துக்கு ரொக்கபாபத்தாக நேர் செய்து பாக விடுதலையாகி விட்டபடியால், ஷை அருணாசலம் ஏற்கனவே செய்திருக்கிறதும் இனிச் செய்கிறதுமான எந்த விதமான காரியங்களும் எங்கள் குடும்ப ஸ்தாவர ஜங்கம சொத்துக்களைக் கட்டுப்படுத்தமாட்டாதென்பதை சகலருக்கும் இதன்மூலம் தெரிவிக்கிறேன்.

இப்படிக்கு,
வயி. அரு. அருணசலச்செட்டியார்.

## நாவல்கள்.

**வடுவூர் துரைசாமி அய்யங்கார் இயற்றியவை.**

| | |
|---|---|
| விலாசவதி இரண்டு பாகமும் சேர்ந்து ... | ... ந—0—0 |
| மதனகல்யாணி மூன்று பாகமும் சேர்ந்து | ... ச—அ—0 |
| பூரண சந்திரோதயம் நான்கு பாகமும் சேர்ந்து | ... எ—அ—0 |
| காளிங்கராயன் கோட்டை இரண்டு பாகமும்சேர்ந்து... | ச—0—0 |
| சௌந்தர கோகிலம் | ... க—அ—0 |
| மேனகா முதல்பாகம் | ... க—அ—0 |
| கும்பகோணம் வக்கீல் இரண்டு பாகமும் சேர்ந்து | ... ந—0—0 |
| பாலாமணி ... | ... உ—அ—0 |
| வித்யாசாகரர் | ... க—ச—0 |
| வஸந்த மல்லிகா | ... க—அ—0 |
| திலோத்தமா | ... 0—கஉ—0 |
| மாணிக்கவாசகர் | ... 0—அ—0 |

**எஸ். எஸ். அருணகிரிநாதர்.**

| | |
|---|---|
| ஆநந்த மனோகரன் (படங்களுடன்) | ... க—0—0 |
| அமிர்தசாகரன்படங்களுடன் | க—ச—0 |

**இதர நாவல்கள்.**

| | |
|---|---|
| மதனகாந்தி | ... க—அ—0 |
| மீரா பாய் | ... 0—கஉ—0 |
| மங்கம்மாள் | ... க—அ—0 |
| ரூபாவதி | ... க—0—0 |
| மதிவாணன் | ... 0—கஉ—0 |
| டாகூர் சிறுகதை க-ந் தொகுதி | ... 0—கஉ—0 |
| ஷை உ-ந் தொகுதி | ... 0—கஉ—0 |
| ஷை ச-ந் தொகுதி | ... 0—கஉ—0 |
| வால்மீகி விஜயம் | ... க—0—0 |
| அக்பர் (செல்வகேசவராய முதலியார்) | ... 0—கக—0 |
| காமாக்ஷி | ... 0—அ—0 |
| ஆநந்த மடம் | ... க—0—0 |
| உத்தியோகம் | ... 0—சு—0 |
| நமது பலசாக்குக்கடை | 0—க0—0 |
| சுலோசனை | ... 0—ந—0 |
| பொற்றொடி | ... க—ச—0 |
| சந்திரகுப்த சக்ரவர்த்தி சரித்திரம் | ... 0—சு—0 |
| முக்தமாலா | ... உ—0—0 |
| நளன் சரிதை | ... 0—க0—0 |
| குசேலர் | ... 0—ச—0 |
| பிரதாப சிங் | ... 0—ந—0 |
| ராஜபுத்திர ரத்தினம் | ... 0—ந—0 |
| கமலபவன அற்புதம் | ... 0—க0—0 |

'குமரன்' புத்தக சாலை'
காரைக்குடி.

சொ. முருகப்ப செட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி "குமரன்" அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

